# ஆரோக்கியமான குழந்தைகள்—
# அழகான சமையலறை !




**இப்போது இவை
இரண்டையுமே அளிக்கிறது
காம்ப்ளான்
—புதிய "ஜார்" பேக்கிலே !**

உங்களது வளரும் குழந்தைக்கு இன்றியமையாத ஊட்டத்தை அளிக்கும் நம்பகமான காம்ப்ளான் இப்பொழுது, புதிய, அழகான உபயோகம் மிகுந்த கண்ணாடி ஜாரிலே வருகிறது. அரிசி, பருப்பு, சாக்கரை, ஊறுகாய் முதலியவைகளை காம்ப்ளான் ஜாரில் நிரப்பி வைத்து சமையலறைக்கு எழில் கூட்டுங்கள்.

இன்றே காம்ப்ளான் வாங்கி, ஜார்களை சேகரிக்கத் தொடங்குங்கள்.

**காம்ப்ளான்**®
திட்டமிட்ட பரிபூரண உணவு.

தற்போது தேர்ந்தெடுத்த இடங்களில் 500 கிராம் ஜாரில், சாக்லேட் சுவையிலே கிடைக்கிறது

GX-60-202 TAM R

# ஒன்பது மாதங்களில்



# ஒரு டஜன் துப்பாக்கிச் சூடுகள்

சமீபத்தில் 'தராசு' கேள்வி - பதில் பகுதியில், சீர்காழி வாசகர் வசந்தகுமார் ''விலைவாசி இப்படியே ஏறிக் கொண்டே போனால், ஜெ.வின் ஓராண்டு சாதனையாக எதைக் குறிப்பிடுவதாம்?'' என்று கேட்டிருந்தார்.

அதற்கு ''ஏன், எட்டு மாதத்தில் பன்னிரண்டு துப்பாக்கிச் சூடுகள் சாதனை இருக்கே'' என்று பதில் சொல்லப்பட்டது. பலர் ஆச்சர்யத்துடன் புருவத்தை உயர்த்தினார்கள். அப்படி ஆச்சர்யப்பட்டவர்களுக்காகத்தான் காவல் துறையினர் நிகழ்த்திய துப்பாக்கிச் சூடு சம்பவங்களின் இந்தப் பட்டியல் :

## ஜூன் 1991

● அதிராம்பட்டினம் அருகே ஒரு கடன் தகராறில் இரு கோஷ்டிகளுக்குள் ஏற்பட்ட மோதலைத் தொடர்ந்து நடந்த துப்பாக்கிச் சூட்டில் நூருல் ஹஸன் என்ற வாலிபர் இறந்தார்.

## ஜூலை

● சென்னை ஐஸ்ஹவுஸ் பகுதியில் இரு மீனவக் குப்பங்களிடையே கோஷ்டித் தகராறு. கும்பலைக் கலைக்க, போலீஸ் துப்பாக்கிச் சூடு நடத்தியது.

## ஆகஸ்ட்

● பரமக்குடி அருகே பா. ம. க. வினர் அம்பேத்கார் சிலை திறப்பு விழா நடத்திய போது, அந்த நிகழ்ச்சிக்குச் சென்ற கட்சிக்காரர்களுக்கும், கிராம மக்களுக்கும் ஏற்பட்ட மோதலைக் கலைக்க துப்பாக்கிச் சூடு. ஐந்து பேர் காயம்!

## செப்டெம்பர்

● ராஜீவ் கொலையைத் தொடர்ந்து புகைந்து கொண்டிருந்த தி. மு. க. - காங்கிரஸ் கோஷ்டி மோதலைக் கலைக்க அறந்தாங்கி அருகே வடக்காடு கிராமத்தில் துப்பாக்கிச் சூடு. சாவு : இருவர், காயம் : இருவருக்கு.

● குளச்சல் (குமரி) அருகே மீனவர்களுக்கும், பஸ் தொழிலாளர்களுக்கும் மோதல் நடந்த போது துப்பாக்கிச் சூடு. சாவு ; மூன்று பேர்.

## நவம்பர்

● சென்னை தாம்பரம் அருகே,

சேலை யூரில் மோகன் என்ற ரவுடியைத் துரத்திச் சென்ற போது நடந்த துப்பாக்கிச் சூடு.

## டிசம்பர்

● சென்னை பேசின் பிரிட்ஜ் காவல் நிலையத்தில் பிரகாஷ் என்ற கைதி மர்ம மான முறையில் மரணமடைந்தார். இதைத் தொடர்ந்து ஒரு கும்பல் போலீஸ் ஸ்டேஷ னைத் தாக்கியது. அப்போது நடந்த துப் பாக்கிச் சூட்டில் ஒருவர் இறந்தார். ஐந்து பேருக்குக் காயம்.

● கோபிசெட்டிபாளையத்தில் காவிரி பிரச்னை தொடர்பான போராட்டத்தில் போலீஸார் துப்பாக்கிச் சூடு நடத்தி னார்கள். சாவு : மூன்று பேர்.

## ஜனவரி 1992

● திருச்செந்தூர் அருகே உள்ள நாலு மூலைக் கிணறில் அ. தி. மு. க. பிரமுகர் ராமச்சந்திரன் என்பவரை சிலர் தாக்கியதன் விளைவாக எழுந்த கலவரத்தை அடக்க, துப்பாக்கிச் சூடு. இரண்டு சிறுமிகள் உட்பட எட்டு பேர் காயம்.

## பிப்ரவரி

● தடா சட்டத்தை எதிர்த்து, சென்னை யில் தி. மு. க. நடத்திய பேரணியில் கலவரம். துப்பாக்கிச் சூட்டில் தனசேகரன் என்பவர் இறந்தார்.

● கொடைக்கானலில் கஞ்சா தோட் டங்களை அழிக்க போலீஸார் சென்ற போது, அங்குள்ள விவசாயிகளுடன் மோதல் நடந்தது; துப்பாக்கிச் சூடும் தொடர்ந்தது.

● ராமநாதபுரம், சாயல்குடி அருகே உள்ள கீழ்ச்செல்வனூரில் ஒரு சாவு வீட்டில் ஏற்பட்ட கோஷ்டி மோதலைக் கலைக்க துப்பாக்கிச் சூடு நடத்தியதில் மூவர் காயம் அடைந்தனர்.

ஒன்பது மாதங்களில் இப்படி பன் னிரண்டு முறை காவல் துறையினர் துப் பாக்கிப் பிரயோகம் செய்துள்ளனர் எனில், 'அமைதிப் பூங்கா' என்று நாம் பெருமைப் பட்டுக் கொண்ட தமிழகத்தின் இன்றைய நிலையையே அது காட்டுகிறது. ஆளும் கட்சி மட்டுமின்றி எதிர்க்கட்சியினரும் பொது மக்களும் விழித்தெழாவிட்டால் வன்முறை மேலும் வேரூன்றும்.

- ப்ரியன்

---



''ஏகாம்பரம் சிக்கனமான எழுத்தர் என்று நான் சொன்னது சரியாப் போச்சு பார்த்தீங்களா?''

''எப்படி சொல்றீங்க?''

''சிறுகதையைத் தபால் கார்டில் எழுதி அனுப்பியிருக்கார்.''

- ராதா வாசுதேவன்

□ ஒன்னாக்குடி, இரட்டைகுளம், மூன்றடைப்பு, நான்குநேரி, ஐந்து வீடு, ஆறுமுகநேரி, ஏழூர்முக்கி, எட்டையபுரம், ஒன்பதாம் கட்டளை, பத்தமடை...

ஒன்று, இரண்டு, மூன்று என்று வரிசையாக இருக்கிறது அல்லவா? இவையாவும் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஊர்ப் பெயர்கள்!

- ஆர். ஜெயலட்சுமி

● அடுத்த இதழில்...

● காங்கிரஸை அழித்துவரும் கோஷ்டிப் பூசல்கள்
- ஸ்பெஷல் ரிப்போர்ட்








## 3.4 கிலோ எடையில் டெலிஃபோன் டைரக்டரி :

சுமார் நான்கு ஆண்டுகள் கழித்து, 3072 பக்கங்கள் கொண்ட, 3.4 கிலோ எடையுள்ள பம்பாய் டெலிஃபோன் டைரக்டரி, இரு தடிமனான வால்யூம்களில் வெளியிடப்பட்டிருக்கிறது. 7.72 லட்சம் பெயர்கள் கொண்ட இதில் 'ஷா' என்ற பெயரில் மட்டும் 35,000 நபர்கள்! எழுத்துக்கள் மிகவும் சிறியதாக இருப்பதைப் பத்திரிகையாளர்கள் சுட்டிக் காட்டிய போது, கூடவே மலிவு விலையில் ஒரு ரூபாய்க்கு ஒரு லென்ஸும் கொடுக்கும் திட்டம் இருப்பதாகக் கூறினார் டெலிபோன்ஸ் ஜெனரல் மானேஜர் வெங்கட்ராம்!

# ஷபனாவின் புதிய போராட்டம்!

திரையுலகில் சற்று ஓய்வு கிடைக்கிறபோதெல்லாம் ஷபனா ஆஸ்மி ஒரு போராட்டத்தில் குதிப்பது வழக்கம். இப்போது அவர் தென் பம்பாயிலுள்ள கீதா நகர் குடியிருப்பினருக்காக, ஒரு கிளர்ச்சியில் இறங்கியிருக்கிறார். பாதுகாப்புத் துறையின் கடற்படைப் பகுதியினர், தங்கள் குவார்ட்டர்ஸுக்கும், கீதாநகர் குப்பத்துக்கும் இடையே ஒரு குறுக்குச் சுவரை எழுப்பியுள்ளனர். இதனால் குடிசைவாழ் மக்கள் இதுகாறும் உபயோகித்து வந்த கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க முடியாதபடி ஆகி விட்டது. இதை எதிர்த்து ஷபனாவின் 'நிவார ஹக் சமிதி'யினர் போராட்டம் நடத்தி வருகின்றனர். கடற்படை அலுவலர்களின் 'சமுதாய நோக்கை'க் கிண்டல் செய்து, வீதியில் ஓரங்க நாடகம் நடத்தி, அதில் ஷபனாவே நடிக்கிறார்! 'பெர்லின் சுவர்' விழுந்த மாதிரி, இந்தச் சுவரும் விழுமா? பொறுத்திருந்து தான் பார்க்க வேண்டும்!

## மந்திரியாக மாறிய சர்ஜன்

ராஜேந்திர கோடே ஒரு சர்ஜன். மகாராஷ்டிர அரசாங்க டாக்டராக வேலை செய்த போது பத்தாண்டுகளில் ஆறு முறை மாற்றல் செய்யப்பட்டார். இதனால் வெறுப்படைந்த அவர், அரசுப் பணியை ராஜினாமா செய்து விட்டு, சிவசேனாவில் சேர்ந்து விட்டார். பின்னர், புல்தானா தொகுதியிலிருந்து எம். எல். ஏ.வாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். சிவசேனாவில் பிளவு ஏற்பட்டு சாகன் புஜிபால் பிரிவினர் காங்கிரஸில் சேர்ந்த போது, இவரும் ஆளுங் கட்சியில் சேர்ந்து, இப்போது உள்துறை, மற்றும் தொழில் இலாக்காக்களின் துணை மந்திரியாகி விட்டார்! மாற்று மருந்து தெரிந்த டாக்டர்!

## கார்ப்பரேஷன் தேர்தலில் 'சந்தேக' வேட்பாளர்கள்!

பிப்ரவரி 25-ஆம் தேதி நடந்த கார்ப்பரேஷன் தேர்தல் வேட்பாளர்களுள் எவ்வளவு பேர் மீது போலீஸ் கேஸ்கள் உள்ளன என்பதைப் பத்திரிகைகள் கட்சி வாரியாகப் பட்டியலிட்டுக் காட்டியிருக்கின்றன! கொஞ்சமும் வித்தியாசமின்றி எல்லாக் கட்சிகளிலிருந்தும் போலீஸ் கேஸ் உள்ளவர்கள் போட்டியிட்டிருக்கிறார்கள். இவர்களில் சிலர், போன தேர்தலில் ஒரு கட்சியில் இருந்தால், இத் தேர்தலில் வேறொரு கட்சி!

## ஊனமுற்றோருக்கு மறுவாழ்வு

தன் வாழ்க்கையின் முதல் இன்னிங்ஸை கிரிக்கெட்டிற்காகச் செலவிட்ட விஜய் மர்ச்செண்ட், இரண்டாவது இன்னிங்ஸை சமுதாயச் சேவைக்காகச் செலவிட்டார். முக்கியமாக ஊனமுற்றோருக்கு மறுவாழ்வு கொடுக்க 'விஜய் மர்ச்சண்ட் ரிஹேபிளிடேஷன் சென்டர்' உருவாக்கி, அவர்களுக்கு வேலைகள் வாங்கிக் கொடுத்தார். அவரது மறைவுக்குப் பிறகும் இந்த சென்டர் ஊக்கத்தோடு பணியாற்றக் காரணம் ஈகின் ஃப்ளாஸ்க் நிறுவன அதிபர் பதம்ஸி, திருமதி விசாலம் வெங்கட்ராம் போன்றோரின் ஈடுபாடு. இவர்கள் ப்ராபோர்ன் ஸ்டேடியத்தில் 'கல்யாண்ஜி ஆனந்த்ஜி மியூசிகல் நைட்' ஒன்று நடத்தி 40 லட்சம் ரூபாய் வசூல் செய்தார்கள்!

– ராஜீவி நரசிம்மன்

**பொன் விழா ஆண்டு : : தங்க நகை பரிசு - 15**



# பரீட்சைக்குப் படித்தேன்

பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள தங்க நகை பரிசு பெறுபவர்:

- பி. கோவிந்தராசன்,
63, யானைக்காரத் தெரு,
ஒரத்தநாடு அஞ்சல்,
தஞ்சை மா.வ.
614 625.

## போராடிச் சிறை சென்றாலும் படிப்பை விடவில்லை!

தமிழகத்தில் ஹிந்தி எதிர்ப்புப் போராட்டம் உச்சக்கட்டத்தில் இருந்த 1965 ஆம் ஆண்டு. அதில் மிகத் தீவிரமாக ஈடுபட்டு ஜெயிலுக்குக் கூடச் சென்றேன். தினமும் போராட்டம் சம்பந்தமான கூட்டங்களும் சந்திப்புகளும் இருக்கும். இவற்றுக்கு மத்தியிலும் எஸ். எஸ். எல். ஸி. தேர்வுக்குப் படிப்பதை நான் விட்டு விடவில்லை. ஒவ்வொரு நாளும் இரவு பத்து முதல் பதினொன்று வரையும் காலை நாலரை முதல் ஆறு வரையிலும் வீட்டில் இருந்து படிப்பேன். படித்தவற்றுள் முக்கியமானவற்றைப் பாக்கெட் டைரியில் குறிப்பெடுத்து எப்போதும் என்னுடன் வைத்துக் கொள்வேன். நேரம் கிடைத்த போதெல்லாம் அதைப் படித்துக் கொள்வேன். அவ்வாண்டு எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை தாமதமாக மே மாதம் நடந்த போது மொத்தத்தில் இருபத்தைந்து சத விகித மாணவர்களே தேர்ச்சி பெற்றார்கள். நான் 63 சதவிகிதம் மதிப்பெண்களுடன் முதல் வகுப்பில் தேறினேன்.

எத்தகைய சூழலிலும் ஒரு மாணவன் படிக்கலாம் - படிப்புக்கென்று ஒரு நேரம் ஒதுக்கி அந்த நேரத்தில் பாடத்தில் முழுக் கவனம் செலுத்தினால் போதும் - என்பது என் அனுபவம் கற்றுத் தந்த உண்மை.

- ஒரத்தநாடு, பி. கோவிந்தராஜன்.



## பொது அறிவே பக்கபலம்!

பாடத்தைத் தவிர பல பொது அறிவு நூல்களையும் தேடிச் சென்று படித்தவன் நான். படிப்புச் சுவையையும் இலக்கிய ரசனையையும் வளர்த்துக் கொண்டேன். இன்டர்மீடியட் பரீட்சையைப் பிரைவேட்டாக எழுதிய போது 'If' என்ற ஆங்கிலக் கவிதை பற்றிய கேள்வி கேட்கப்பட்டது. அதே கவிதையை ராஜாஜி சுயராஜ்யா இதழில் மேற்கோள்காட்டி அரசியல் விமர்சனம் எழுதியிருந்ததைப் படித்து ரசித்தது ஞாபகம் வந்தது. என் விடையில் ராஜாஜியின் சுயராஜ்யா கட்டுரையைக் குறிப்பிட்டு மிக உற்சாகமாகவும் சிறப்பாகவும் எழுதினேன். பரீட்சை ஹாலில் மேற்பார்வை செய்த ஆசிரியரே என் விடையைப் படித்து விட்டு, பரீட்சை முடிந்த பிறகு தனியே அழைத்துப் பாராட்டினார். அந்த பரீட்சையில் சிறப்பு நிலை 'D' (Distinction) பெற்றேன். இதே முறையில் பல நூல்கள் படித்துத்தான் பி. ஏ. பி. டி. பரீட்சைகளையும் சிறப்பாகச் செய்தேன்.

- எரவாஞ்சேரி, தேதியூர் பாலு.

## 'சீனியர்கள்' ஆசீர்வாதம்!

எங்கள் கல்லூரியில் ஆசிரியர், மாணவர் போராட்டங்கள் மாறி, மாறி நடந்த காரணத்தால் பரீட்சைக்கு முன் பாடத் திட்டப்படி பாடங்களை நடத்தி முடிக்கவில்லை. புரிந்த பாடங்களைக் காட்டிலும்



புரியாத பாடங்களே அதிகமாய் இருந்தன. எப்படி பாஸ் செய்வது? சிறிது குழப்பத்துக்குப் பின் ஹாஸ்டலை விட்டு வெளியேறி சீனியர் மாணவர்களுடன் தங்கினேன். அவர்களுக்கு உதவியும் பணிவிடையும் செய்து நன்மதிப்பைப் பெற்று, புரியாத பாடங்களை விளக்கச் சொல்லிக் கேட்டேன். அவர்களும் கலகலப்பாகவும் உற்சாகமாகவும் பாடங்களை விளக்க, எல்லா பரீட்சைகளையும் எழுதி 'பாஸ்' ஆகி விட்டேன்.

- ஈரோடு - 2, ஜி. நிரஞ்சன்.

## பரீட்சை ஹாலில் பேரதிர்ச்சி!

பரீட்சைக்குப் பிரமாதமாகத் தயார் செய்திருந்தேன். வழக்கமாகப் பதினைந்து நிமிடங்கள் முன்னரே பரீட்சை ஹாலை அடைந்து நண்பர்களுடன் பாடங்களைச் சற்று அலசுவேன். அன்று சற்று தாமதமாகி விட்டதால் நேராக ஹாலுக்குள் நுழைந்து அமரவே நேரமிருந்தது. கேள்வித்தாளை வாங்கிப் பார்த்த எனக்குப் பேரதிர்ச்சி. அன்று பிஸிக்ஸ் பரீட்சை; நான் தயார் செய்திருந்ததோ கெமிஸ்ட்ரி பரீட்சைக்கு! உடல் வியர்த்து, காதுகள் அடைத்துக் கொண்டன. ஒருவாறு சமாளித்துக் கொண்டு எழுதி பாஸ் செய்து விட்டேன்.




ஆனால் அன்று நான் செய்த முட்டாள்தனமான தவறையும் அதன் விளைவாக உண்டான பயத்தையும் என்னால் மறக்கவே முடியாது.

மாணவர்கள் பரீட்சை டைம் டேபிளைச் சரிபார்த்துக் கொள்வதுடன், ஏற்கெனவே அறிவித்த தேதி, நேரத்தில் மாற்றம் செய்கிறார்களா என நாளிதழ்களில், கவனித்து வருவதும் அவசியம்.

- ஆர். பத்மநாபன், பாண்டிச்சேரி,.

## கண்விழித்ததற்குக் கிடைத்த 'பலன்'!

தேர்வுகள் துவங்கிய பின்னரும் இரவு இரண்டு மணி வரை படித்துக் கொண்டிருந்தேன். எப்படியாவது பி.ஈ. யில் எண்பது சதவிகிதம் எடுத்து விட வேண்டும் என்று வெறி. ஆறு பேப்பர்களுள் ஐந்தினைப் பிரமாதமாகச் செய்தேன். இறுதிப் பரீட்சைக்கு முன் தினம் மதியம் இரண்டு மணி தொடங்கி இரவு ஏழு வரை படித்தேன். சோர்வு அழுத்த, சற்று ஓய்வெடுத்து மீண்டும் படிக்கலாம் என்று படுத்தேன். கண் விழித்த போது மறுநாள் காலை ஏழு மணி! தொடர்ந்து கண் விழித்ததால் என்னையறியாமல் பன்னிரண்டு மணி நேரம் சேர்ந்தாற்போல் தூங்கி விட்டிருந்தேன்! அலறியடித்து எழுந்து பாதி படித்த நிலையிலேயே காலை பத்து மணி பரீட்சைக்குச் சென்றேன். வருடம் முழுவதுமே நன்றாகப் படித்திருந்ததால் அந்தப் பரீட்சையை என்னால் எழுத முடிந்தது. ஆனால் மற்ற பேப்பர்களை விட அதில் மார்க் குறைவாகவே வந்தது. கடைசி நேரத்தில் படிக்கும் ரகமாக நான் இருந்திருந்தால் நிச்சயம் அந்த பரீட்சையில் பாஸ் செய்திருக்க முடியாது.

- ஏ. ராஜா ஜெயசந்திரபோஸ், கோவை - 11.

# அர்ஜுனா விருது பெற்ற டி.டி. சாம்ப்



'டொக் டொடக் டொக்' என்று சின்ன வெள்ளைப் பந்தைத் துறத்தித் துறத்தி லாகவமாய் அடிக்கப் பிடித்திருந்தது. அதன் மீதிருந்து பார்வையை அகற்றாமல், மனத்தை ஒருமுகப்படுத்தி, மட்டையைக் கச்சிதமாய்த் திருப்பி, தேவையான அளவு பலத்தைப் பிரயோகித்து, எதிராளியான மாணவிக்கு எட்டாத இடத்தில் 'பட்' டென்று விழச் செய்வது சுலபமாய்க் கைவரலாயிற்று.

ஆனால், நியாதி தன் பள்ளியில் (செயின்ட் பீட்டர்ஸ் ஸ்கூல், பம்பாய்) சக மாணவர்களையும் டேபிள் டென்னிஸ்ஸில் தோற்கடித்த பின்பு தான் எல்லோரும் 'அட' என்று நிமிர்ந்து உட்கார்ந்தனர். ஆண்களையும் தோற்கடித்துவிட்ட 'இந்தப் பெண்ணுக்குச் சிறப்பான திறமை இருக்கிறது' என்று விளையாட்டுப் பயிற்சியாளர் தனிக் கவனம் செலுத்த ஆரம்பித்தார். செயின்ட் பீட்டர்ஸ் பள்ளியின் ஐந்து டேபிள் டென்னிஸ் டேபிள்களுள் ஏதேனும் ஒன்றில் தினமும் பயிற்சி செய்ய முடிந்தது. தவிர, மட்டுங்கா ஜிம்கானாவில் சனி, ஞாயிறுகளில் பயிற்சி.

பள்ளிகளுக்கிடையேயான டி. டி. போட்டிகளில் ஆடி வென்ற நியாதி ராய் சீக்கிரமே மஹாராஷ்டிர மாநிலப் பெண்கள் சாம்பியன் பட்டத்தைப் பெற்றார். 1980 இல் ஜூனியர் தேசிய சாம்பியன் ஆனார். சீனியர் தேசியப் போட்டிகளில் '87, '89, '91 என மூன்று முறை முதலிடம்; ஒலிம்பிக்ஸில் பங்கேற்கத் தகுதி பெற்று சியோல் பயணம். வெற்றிப் படிகளில் வேகமாய் ஏறி '89 ஆம் ஆண்டுக்கான அர்ஜுனா விருதையும் பெற்றுள்ளார் நியாதி.

''91 இல் பெற்ற வெற்றியையே மிக இனிமையான வெற்றியாகக் கருதுகிறேன்...'' என்கிறார் நியாதி ஷா - (முன்பு நியாதி ராய்).

ஏன்....?

''திருமணமான பிறகு எனக்குக் கிடைத்த முதல் பெரிய வெற்றி அது. என் கல்யாணம் நிச்சயமானதுமே எல்லோரும் 'இனி உன் ஆட்டம் அவ்வளவுதான்' என்று தாங்களாகவே முடிவு செய்து கூற ஆரம்பித்து விட்டார்கள். அதற்கேற்றார் போல் '89 இல் பெற்ற தேசிய டைட்டிலை '90 இல் இழந்தேன். என் கணவருக்கும் இதனால் மிகுந்த கவலை. 'திருமணமானதும் தோற்றுவிட்டாள்' என்று உலகம் பேசுமே....! இதையெல்லாம் முறியடிக்கும் வண்ணமாக '91 ஆம் ஆண்டின் சாம்பியன்ஷிப்பைப் பெற்றுவிட்டேன்.''

'''87, '89, '91 என்று ஓராண்டு விட்டு ஓராண்டு ஜெயித்து வருகிறீர்கள். இந்த 'pattern' க்கு என்ன காரணம்?'' என்று நியாதியிடம் கேட்கிறோம்.

''ஜெயிப்பதற்காக ஆடும்போது உத்வேகம் அதிகரிக்கிறது; ஏற்கெனவே வென்றுள்ள பட்டத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமே என்ற எண்ணத்துடன் ஆடும்போது, அந்தக் கவலையே ஆட்டத்தைப் பாதிக்கிறது.....''

- சிரித்தபடி கூறுகிறார் நியாதி.

கழுத்துவரை வெட்டப்பட்ட (ஆட்டத்தின் போது இடைஞ்சல் பண்ணாத) குட்டைத் தலைமுடி, சிரிக்கும் கண்கள், நகங்கள் சுத்தமாய் வெட்டப்பட்ட, வலிமையான, அகன்ற கைகள், எளிமையான உடை.... இதுதான் நியாதி ஷா.

சற்றே கூச்சத்துடனும் தயக்கத்துடனும் பேச ஆரம்பித்து விரைவில் மனம் திறக்கிறார் நியாதி:

''எங்களுடையது பெற்றோர் நிச்சயித்தத் திருமணம்தான். இருந்தாலும்

திருமணத்துக்கு முன்னரே, 'என் டேபிள் டென்னிஸ் ஆட்டத்துக்கும் பயிற்சிக்கும் முழு மனத்துடன் ஊக்கமும் ஆதரவும் அளிக்க வேண்டும் என்று வருங்காலக் கணவரிடம் வெளிப்படையாகக் கேட்டுக் கொண்டேன். அவர் அதற்கு ஒப்புக் கொண்டது மட்டுமின்றி நடைமுறைப் படுத்தியும் காட்டினார். இத்தனைக்கும் அவருக்கு டேபிள் டென்னிஸ்ஸில், நேரடி யான ஆர்வம் கிடையாது. பயிற்சி, போட் டிகள் என மாதக் கணக்கில் தொடர்ந்து வெளியூர் போய் விடுகிறேன். இதைப் பொருட்படுத்தாதது மட்டுமின்றி நான் உள் ளூரில் இருக்கும்போதும் அவருக்குத் தேவையானவற்றைச் செய்ய வேண்டு மென்றோ, வீட்டு வேலைகளைச் செய்ய வேண்டும் என்றோ சராசரி கணவர்களைப் போல் அவர் எதிர்பார்ப்பதில்லை. செலவைப் பொருட்படுத்தாமல் நாங்கள் இருவர் மட்டுமே உள்ள வீட்டில் இரண்டு பணியாட்களை வைத்துக் கொண்டிருக்கி றோம்.... வேறு கவலைகளேயின்றி ஆட் டத்தில் ஈடுபட முடிவது பெரிய அனு கூலம். அத்தகைய சூழ்நிலையை எனக்கு உருவாக்கித் தருவதில் கண்ணும் கருத்து மாய் இருக்கும் என் கணவருக்கு என் வெற்றியில் 90 சதவிகிதம் பங்கு உண்டு....''

''பத்து சதவிகிதம் மட்டுமே உங்கள் திறமை என்கிறீர்களா....?''

''வெற்றிக்குத் திறமை அவசியம்தான். ஆனால் திறமையைவிட வெற்றி பெற வேண்டும் என்ற மனத்துணிவு மிகவும் முக் கியம். குடும்பப் பிரச்னைகளோ சிக்கல் களோ இருந்தால் அவை நிச்சயம் இந்த மனோநிலையைப் பாதிக்கும். உடனே ஆட்டமும் பாதிக்கப்படும். இதனால்தான் திருமணமான பிறகு பெற்ற தேசிய சாம் பியன்ஷிப் பட்டத்தை நான் மிகவும் இனிய வெற்றி என்று குறிப்பிட்டேன்....''

**'91** ஆம் ஆண்டின் வெற்றி நியாதிக் கும் அவர் கணவருக்கும் மட்டுமின்றி தமி ழகத்துக்கே இனிய வெற்றிதான்! ஏனெ னில் தமிழ்நாடு ஆட்டக்காரர் என்ற முறை யில் அவர் பெற்ற முதல் தேசிய சாம்பி யன்ஷிப் அதுதான்.

இந்தியன் ஆயில் கார்ப்பரேஷனில் (IOC) பணியாற்றும் நியாதி முன்பு மஹா ராஷ்டிராவுக்காகவும் பின்னர் Petroleum Sports Control Board (PSCB) அணிக்கும் ஆடினார்.

'91 ஆம் ஆண்டு PSCB அணியில் இடம்பெற்றுத்தரும், முன் சுற்றுப் போட்டி களில் இவர் வெற்றி பெறவில்லை. இத னால் தமிழ்நாடு அணியில் இடம்பெற்று தேசியப் போட்டிகளுள் நுழைய முயன் றார். இதற்காக நடத்தப்பட்ட ஐந்து முன் சுற்றுப் போட்டிகளுள் மூன்றில் மட்டுமே ஆடியதால் தமிழக அணியில் இடம்பெறும் தகுதியை இவர் அடையவில்லை. வெளி நாட்டுக்கு மூன்று மாதப் பயணமாகச் சென்றுவிட்டதால் நேர்ந்தது இந்த நிலைமை. தமிழக டேபிள் டென்னிஸ் அசோசியேஷன் செயலர் வேணுகோபால் ராவ் விதிகளைச் சற்றே வளைந்து கொடுக்கச் செய்தார். அவர் நம்பிக் கையைக் காப்பாற்றி, தமிழகத்துக்குப் பெருமை சேர்த்துவிட்டார் நியாதி.

''சென்னைவாசம் எப்படி இருக் கிறது....? விளையாட்டு வசதிகள் எப்படி.....?'' என்று கேட்டதும் பம்பாய்க் கும் சென்னைக்கும் இடையேயுள்ள வித்தி யாசத்தைச் சொல்லி வியந்து போகிறார் நியாதி:

''பம்பாயில் விளையாட்டுப் பயிற் சிக்கு ஏராள வசதிகள் - காற்றோட்டமான அறைகளில் நிறைய டேபிள்கள் இருக்கும். ஒவ்வொரு குடியிருப்புப் பகுதியிலும் விளையாட்டுக் கிளப்புகள் உண்டு.... ஆனால் வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்ள முன்வருவோர் குறைவு.

☛ நியாதி : வெற்றி வேட்கை





பம்பாயில் இளைய தலைமுறையினருக்கு ஃபாஷனிலும்- டிஸ்கோவிலும்தான் நாட்டம் அதிகம்! ஆனால் தமிழ்நாட்டில் உழைப்பாளிகள் அதிகம். புவனேச்வரி, செல்வி போன்ற அற்புத முன்னணி பெண் ஆட்டக்காரர்கள் இங்கே உருவாகியிருக்கிறார்கள். சந்திரசேகர் ஓர் அருமையான பயிற்சியாளர். ஆனால் விளையாட வசதிகள் மிகமிகச் சுமாரானவை. சில இடங்களில் ஆஸ்பெஸ்டாஸ் கூரையின் கீழ் புழுங்கியபடி ஆட வேண்டியிருக்கிறது. இங்கு வந்த புதிதில் தவித்துப் போனேன். தனியார் ஸ்பான்ஸர்ஷிப் பெற்று டேபிள் டென்னிஸ் பயிற்சி வசதிகளை நாம் முன்னேற்ற வேண்டும்....''

''நியாதி என்ற பெயருக்கு என்ன அர்த்தம்...?'' இறுதிக் கேள்வியாகக் கேட்கிறோம் :

''விதி - நியாதி என்றால் விதி......''

விதி நியாதிக்கு ஆதரவாக இருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை: நூறு சதம் ஒத்துழைக்கும் கணவர் சேதன் ஷா; பொருளாதாரக் கவலைகளுக்கு இடம் கொடுக்காத ஐ.ஓ.சி. ஆதரவு (தமது உள்நாட்டு வெளிநாட்டுப் பயணச் செலவுகள் அனைத்தையும் அலுவலகமே ஏற்கிறது என நன்றிப் பெருக்குடன் கூறுகிறார் நியாதி); சிறு வயது முதலே கிடைத்த வாய்ப்புக்கள்; ஆரோக்கியமான சூழ்நிலை.....

எத்தனை பேருக்கு இவ்வளவும் கூடி வரும்....?

''என் அதிர்ஷ்டத்தை உணர்கிறேன். என்னைப் போன்ற வாய்ப்பு - வசதிகள், சாதகமான சூழ்நிலை இன்னும் பல திறமைசாலிகளுக்குக் கிடைக்க வேண்டும் என்பதே என் விருப்பமும் பிரார்த்தனையும்.....'' என்கிறார் நியாதி ஷா.

- சீதா ரவி

அட்டை வண்ணப்படம் : உத்ரா
படங்கள் : ஏ.எஸ். திவாகர்

# திருமண அழைப்பு

ஐந்து மணிக்கே அலாரம் முழங்கத்
திரியும் பாலில் விரியும் காலை;
சரியாய் எழுப்பிய மணியில் மகிழ்ந்து
திரிந்த பாலுக் கொருகணம் வருந்தி,
திருமண அழைப்பை விரைவினில் தேடி,
சிக்கன மாகக் குளியலை முடித்து,
அக்கறை யின்றி ஒப்பனை செய்து
செருப்பின் வாரைப் பொருத்திக் கொண்டு
பொறுப்பில் லாதஎன் மகனைப் பொரிந்து
புலரும் ஒளியில் விரையும் போது
வளரும் பெரிய மக்கள் குழுவையும்
வரவே மறுக்கும் பஸ்ஊ ழியரையும்
குறைவாய் டீசல் கொடுக்கும் பேரையும்
ஹ ுசைனும் புஷ்ஷு ும் விளைத்த போரையும்
ஏசி முடித்துப் பஸ்ஸில் ஏறிச்
சில்லறைக் காய்மிக அல்லலும் பட்டு
சலிப்பாய்த் திருமணச் சத்திரம் கண்டு
வலிப்பாய்ப் புன்னகை விளைத்துக் கொண்டு
மூத்திரக் குட்டையோர் மூச்சில் தாண்டி
பாத்திரம் பண்டம் காய்கறி மற்றும்
முகமறி யாதகும்பலின் நடுவே
தகவல் சொன்னவர் தலையைத் தேடி
வந்ததை உணர்த்தி டிபனை முடித்து
இருப்பில் கொஞ்சம் மொய்யை எழுதி
செருப்பை மறவா தெடுத்துக் கொண்டு
மறுபடி பஸ்ஸில் இடிபட நின்று
வீட்டில் நுழைந்ததும் மனையாள் கேட்டாள்
மணமகள் நிறமும் உயரமும்; அடடா!
மணமக் களைநான் பார்க்கவு மில்லையே!



பொன் விழா கவிதைப் போட்டி

இ. சுரேஷ்

# ஜோக்கான பட்ஜெட்!

"என்னைத் தேர்ந்தெடுத்தால் ஒவ்வொரு வரி உயர்வையும் வரி குறைப்பு போல் தோன்றச் செய்வேன்'' என்று அரசியல்வாதி தேர்தல் வாக்குறுதி அளிப்பதாக அமெரிக்கப் பத்திரிகையில் வெளியாகியுள்ள ஜோக்கை நிஜமாக்கிக் காட்டியிருக்கிறார் நம் நிதி அமைச்சர் மன்மோஹன் சிங்.

நிறைய ஜோக் அடித்தபடியே அவர் வழங்கிய பட்ஜெட்டின் மிகப் பெரிய ஜோக், உயர் மத்தியதர வகுப்பினருக்கு உதவுவதாக அவர் கூறிக் கொண்டு வருமான வரி விலக்கு உச்ச வரம்பை 28000 ஆக உயர்த்தியதுடன் அதிகபட்ச வருமான வரியை 40 சதமாகவும் நிர்ணயித்திருப்பதுதான். இதற்காக அவரை வாழ்த்தும்போதே, சேமிப்புக்காக அளிக்கப்பட்டு வந்த பல்வேறு சலுகைகளையும் அவர் ரத்து செய்து விட்டதால், வலது கையால் தந்ததை இடது கையால் அவரே திரும்பப் பிடுங்கிக் கொண்டது போலாயிற்று! ஆனால் மக்கள் வாழ்த்தைத் திரும்பப் பிடுங்கிக் கொள்ள முடியுமா என்ன!

பட்ஜெட்டுக்கு முற்பட்ட பொருளாதார அறிக்கை ஐந்து சதம் வளர்ச்சியிலிருந்து உற்பத்தி $2\frac{1}{2}$ சதமாகக் குறைந்து போயிற்று என்று ஒரு குரல் அழுதிருக்கிறது. இதைச் சீர் செய்யத்தானோ என்னவோ தொழில் துறைக்குக் கணிசமான சலுகைகள் காட்டியிருக்கிறார் சிங். தொழில் நிறுவனங்களுக்கான வரிகளை உயர்த்தாததே - மாற்றமின்றி வைத்திருப்பதே - பெரிய சலுகைதானே!

தொழில் - வர்த்தகத்துக்கு உதவி, அந்நியச் செலாவணி நிலையில் அபிவிருத்தி காண அமைச்சர் சுங்க (கஸ்டம்ஸ்) வரிகளைக் கணிசமாகக் குறைத்திருக்கிறார். வரவேற்க வேண்டியதுதான். தொழில்துறை வரவேற்றும் உள்ளது. ஆனால் இதற்கு ஈடுகட்ட, உற்பத்தி (எக்ஸைஸ்) வரிகளைப் பல இனங்களில் எக்கச்சக்கமாக உயர்த்தியிருக்கிறார். 'இது விலைவாசி உயர்வுக்கு மேலும் வழிவகுக்காது; சராசரி மக்களின் வாழ்க்கையைப் பாதிக்காது' என்றால் அது நிதி அமைச்சர் உதிர்த்த ஜோக்குகள் அனைத்தையும் தூக்கிச் சாப்பிட்டு விடும் பிரமாத ஜோக்காக அமையும்!

பட்ஜெட்டின் பாராட்டத்தக்க அம்சம் பற்றாக்குறையைக் கணிசமாகக் குறைத்திருப்பதுதான். இதனால் பணவீக்கம் குறையவும் வாய்ப்புண்டு. ஆனால் 'பட்ஜெட் பற்றாக்குறை குறையக் காரணம், அரசாங்கத்தின் அநாவசியச் செலவினங்கள் குறைந்ததே' என்று கூற முடியவில்லை. திட்டச் செலவுகளும் அத்தியாவசியச் செலவினங்களும்தாம் குறைக்கப்பட்டுள்ளன! உதாரணமாக, கிராமப்புறங்களில் வீட்டு வசதி, தண்ணீர் வசதி, மற்றும் கல்விக்கான ஒதுக்கீடுகள் குறைக்கப்பட்டுள்ளன. இந் நிலையில் நம் நாட்டின் ஏழை பாழைகள் விடியலைக் காண்பது என்பதே ஒரு ஜோக்தான்!

"தியாகத்துக்குத் தயாராகுங்கள்'' என்று நிதி அமைச்சரும் பிரதமரும் அவ்வப்போது கூறி வர, 'பட்ஜெட் ரொம்பக் கடுமையாக இருக்கப் போகிறது; என்னென்னவெல்லாம் விலை உயரப் போகிறதோ!' என்று பயந்து கொண்டிருந்த மக்கள் 'ஏதோ இந்த மட்டில் விட்டாரே' என்று திருப்தி அடைந்திருக்கிறார்கள். ஆனால் வசதி படைத்தோருக்குப் பல சலுகைகளை வழங்கியுள்ள நிதி அமைச்சர், ஏழை பாழைகள் பக்கமும் கவனம் செலுத்தி, குறைந்தபட்சம் ரேஷன் மண்ணெண்ணெய் விலையையாவது லிட்டருக்குப் பத்து - இருபது பைசா குறைத்திருந்தால் 'ஏழை பங்காளன்' என்ற நற்பெயரைப் பெற்றிருப்பார். இப்போதோ எதிர்க்கட்சியினர் 'பணக்காரனின் நண்பன்' என்று முத்திரை குத்துகின்றனர்! முதலீடுகளுக்குச் செல்வ வரியில் விலக்குண்டு; செல்வ வரிக்குரிய வரம்பும் உயர்த்தப்பட்டுள்ளது என்பதையெல்லாம் எடுத்துக் காட்டுகின்றனர்.

அயல்நாட்டிலிருந்து தங்கம் கொண்டு வரலாம் என்ற திட்டம், தங்கம் விலை குறைய வழிவகுத்திருக்கிறது. "ரொம்ப சந்தோஷம்; அரிசி, பருப்பு விலை குறைந்தால் சொல்லுங்கள்'' என்று சராசரி குடும்பத் தலைவி கூறுவதாக உள்ள ஹிந்து - கேசவ் கார்ட்டூனை, ஜோக் விரும்பியான நிதி அமைச்சருக்கு சிபாரிசு செய்கிறோம்.




கல்கி



1992
மார்ச் 15
மலர் : 50
இதழ் : 33
பிரஜோத்பத்தி
பங்குனி 2




# வாழ்க்கையைத் துவங்க வழிகாட்டுகிறார்கள்!

ராணியின் தந்தை வாட்ச்மேன் பணி புரிபவர். தாம் வேலை செய்யும் வீட்டை அடுத்திருந்த வீட்டில் பெயிண்டிங் செய்ய வந்த சுப்பிரமணியத்துடன் அவருக்குப் பரிச்சயம் ஏற்பட்டது. உழைப்பாளியும் நற்குணம் படைத்தவனுமான அவனைத் தம் மகளுக்கு மணம் முடிக்க விரும்பினார் ஆனால் பணம்....?

பவிலிகா சகாயமேரியை மணக்க விரும்பினார் அமல்ராஜ். டெய்லரான அமல்ராஜுக்கும் பணமின்மையே பிரச்னை...

நியூட்டன் ஆம்ப்ரோஸ் அடையார் பார்க் ஷெராட்டன் ஹோட்டலில் ஸ்டுவர்டாகப் பணிபுரிகிறார். சொந்தக்காரப் பெண்ணான சகாயி செல்வியை மணக்க இவருக்கு விருப்பம். பணப் பற்றாக்குறை காரணமாகத் திருமணம் ஐந்து ஆண்டுகளாகக் கைகூடியே வரவில்லை.

இந்த மூன்று ஜோடிகளின் திருமணமும் ஒரே பந்தலின் கீழ் சமீபத்தில் நடந்தது. இவர்களுடன் இவர்களைப் போல் எளிய நிலையிலிருந்த மேலும் 27 ஜோடிகளுக்கும் திருமணத்தை நடத்தி வைத்தனர் The Social Aid Charitable Trust என்ற அமைப்பினர்.

1978 ஆம் ஆண்டு முதல் ஆண்டு தோறும் இந்த நற்பணியைச் செய்து வரும் இவ்வமைப்பு இதுவரை எழுநூறுக்கும் மேற்பட்டவர்களுக்கு நல்ல வாழ்க்கை அமைத்துக் கொடுத்துள்ளது.

குறிப்பிட்ட சுப தினத்தில், ஹிந்து, கிறிஸ்துவ, இஸ்லாமிய முறைப்படி மணச் சடங்குகள் செய்விக்க ஏற்பாடுகள் செய்வதுடன், தம்பதிகளுக்குத் திருமணத்துக்கான தாலி, மெட்டி போன்றவை தவிர, வாழ்க்கையைத் தொடங்கத் தேவையான ஆடை அணிகலன்களையும், பாத்திரம் மற்றும் மளிகைச் சாமான்களையும் கொடுத்து உதவுகிறது இந்த அமைப்பு. அதோடு கணவனுக்கு ஒரு சைக்கிளும் மனைவிக்கு ஒரு தையல் மிஷினும் இலவசமாக வழங்குகிறது. அவர்கள் சுயதொழில் செய்து வாழ்க்கை நடத்த வழிகாட்டுகிறது. திருவல்லிக்கேணியில், 'விமன்ஸ் இண்டஸ்ட்ரியல் இன்ஸ்டிடியூட்' என்ற பெண்கள் பயிற்சி மையத்தை நடத்துகிறது.

மணம் செய்து கொள்ள விரும்பும் ஜோடிகள் இந்த அமைப்பின் அங்கத்தினர்கள் மூலம் அழைத்து வரப்படுகிறார்கள். அவர்களைத் தீர விசாரித்து, திருப்தி ஏற்பட்ட பிறகே திருமண ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

மணம் செய்து சென்ற தம்பதிகளை ஓரிரண்டு ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் 'சந்திப்பு'க்கு அழைத்து விசாரிக்கிறார்கள். பெரும்பாலானவர்கள் மகிழ்ச்சியாகவே உள்ளதைக் கண்டறிந்துள்ளார்கள். அபூர்வமாய் ஒரு சிலர் தையல் மிஷினை விற்றுவிட்டு 'வீட்டில் இருக்கிறது' என்று பொய் சொல்வதுமுண்டு. ஒரே தையல் மிஷினை வைத்துக் கொண்டு முன்னேறி இப்போது தமக்குக் கீழ் பத்து பெண்களைப் பணியில் அமர்த்திக் கொண்டு தையல் தொழில் நடத்தி வரும் பெண்ணும் உண்டு!

தனது நற்பணிக்கு Social Aid Charitable Trust நன்கொடை வருகையையே நம்பியிருக்கிறது.

– பானுமதி ராமச்சந்திரன்
படம் : யோகா

# போதை மருந்தை எதிர்த்துப் போர்!

சுமார் பத்து வருடங்களுக்கு முன்னால் ஆஃப்கானிஸ்தானத்திலிருந்து வந்த அகதிகளை தில்லி ''நிஹார்யான்'' பகுதியில் குடியேற்றினர். அகதிகளுடன் வந்த போதை மருந்து அப்பகுதி இளைஞர்களை அடிமையாக்கியதோடு விற்பனையாளர்களாகவும் மாற்றிவிட்டது. பக்கத்திலுள்ள ஜி.பி.ரோடு ஒரு புகழ் பெற்ற 'சிவப்பு விளக்கு' பகுதியாக இருக்கவே இரண்டு குற்றங்களும் கைகோர்த்துக் கொண்டு உலாவர நிஹார்யான் காலனி 'போதை மருந்துக் கோட்டை'யாக மாறி விட்டது.

குற்றம் மேலும் மேலும் பெருகவே, இந்தப் பிரச்னைக்கு முடிவுகட்ட அந்த வட்டாரத்துப் பெரியவர்கள் சிலர் வரிந்து கட்டிக் கொண்டு கிளம்ப, அதிர்ஷ்டவசமாக தீபக் மிஸ்ரா என்ற மிக நாணயமான போலீஸ் டி.சி.பியும் வந்து சேர்ந்தார். அப்துல்லா என்ற தாதாவின் தலைமையின் கீழ் நடந்து வந்த குற்றம், அதிரடி நடவடிக்கைகளுக்குட்பட்டு, இன்று வெகுவாகக் குறைந்துவிட்டது. அப்துல்லாவும் கூட்டாளிகளும் போன இடம் தெரியவில்லை. குற்றத்துக்குத் துணைபோன குடும்பங்கள் பகிஷ்கரிக்கப்படவே, ''அப்துல்லா இங்கே தலைகாட்டினால் தெரியும் சேதி!'' என்று பொது மக்கள் சர்வசாதாரணமாகச் சூளுரைக்கும் அளவுக்கு வட்டாரம் மாறிவிட்டது.

## மக்களுக்குத் தடியடி; பிரச்னைக்குக் கேள்விக்குறி!

''அஷோக் விஹார்'' என்ற புறநகர்ப் பகுதி, ரயில்வே லைனுக்கு அப்பால் அடுக்குமாடிக் கட்டடங்களும் இப்பால் குடிசைப் பகுதிகளும் நிறைந்து வழியும் ஒரு ஏரியா. கட்டடப் பகுதியில் உள்ள ஒரு பார்க் தான் குடிசை வாழ் மக்களின் பொதுக் கழிப்பிடமாக இருந்தது. அலுத்து வெறுத்த அடுக்கு மாடிக்காரர்கள் தில்லி முனிசிபாலிடிக்குச் சொல்லி அந்தப் பார்க்குக்குச் சுற்றுச்சுவர் கட்டுவித்தனர். ஆனால் அங்கங்கே சுவர் பெயர்க்கப்பட்டு முன்னிலும் அதிகமாக அந்த பார்க் அசிங்கப்படுத்தப்படவே, மாடிவீட்டுக்காரர்கள் வழக்குப் பதிவு செய்து தடையுத்தரவும் பெற்று பார்க்கைச் சுற்றிப் போலீஸ் பந்தோபஸ்துக்கும் ஏற்பாடு செய்தனர். காவல் துறையினர் மீது கோபம் கொண்ட குடிசை வாழ் மக்கள் கொதித்தெழுந்து, பிப்ரவரி 26 ம் தேதி 'நாங்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கு எதிரே சாலைகளில் 'குந்துகிறோம்' என்று தண்ணீர்ச் செம்புகளுடன் ஆயிரக் கணக்கில் முன் காலை நேரத்தில் குழுமி விட்டனர். குடிசைவாசிகளின் நோக்கம் நிறைவேறுமுன் போலீஸ் தடியடி, கைது எல்லாம் சாங்கோபாங்கமாக நடந்தேறின. கழிப்பிடப் பிரச்னை மட்டும் இன்னும் கேள்விக்குறியாகவே இருக்கிறது!



## சோப்ளாங்கி வழக்குகள்!

தில்லியில் 'வரதட்சிணைச் சாவு' தினசரி நடக்கும் சமாச்சாரம். சமீபத்தில் தில்லியில் பிரமிளா தண்டவதே அவர்களைத் தலைவியாகக் கொண்ட 'மஹிளா தக்ஷத சமிதி' ஏற்பாடு செய்த 'வரதட்சிணைச் சாவு வழக்குகள் மற்றும் தண்டனைகள்' என்ற கருத்தரங்கில் சமூக நல அமைப்பாளர்கள், நீதிபதிகள், வழக்கறிஞர்கள், காவல்துறை அதிகாரிகள், கலந்து கொண்டு விலாவாரியாகப் பிரச்னையை அலசினார்கள். கணக்கற்ற

வழக்குகள் தொடரப்பட்டும் 1983 முதல் இன்று வரை மொத்தம் நாற்பத்து மூன்று வழக்குகளில் மாத்திரமே தில்லி நீதி மன்றங்களில் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. அதிலும் குற்றவாளிகள் தண்டனை அடைந்தது மூன்று வழக்குகளில்தான். மீதி வழக்குகள் போதிய சாட்சியம் இன்றி தள்ளுபடி. சாட்சிகள் தடுமாற்றம், காவல்துறை நடத்தும் 'சாட்சி அழிப்பு' அட்டூழியம், சில அரசு மருத்துவமனை டாக்டர்களின் ஏறுமாறான 'மெடிக்கல் சர்டிபிகேட்டு'கள் போன்றவை சாதகமாக, குற்றவாளிகள் இலகுவாகத் தப்பி விடுகின்றனர்!

## டேராடூனில் கொடூரம்

டேராடூனிலிருந்து இருபது கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள ஹரிபூர் கிராமத்தில் வசிப்பவர் தாவேஸ்ரீ. இவர் 'முதியோர் ஓய்வூதியம்' பெற்றுவரும் அறுபத்தியொரு வயதான ஏழை விதவை. டாக்டர் என்று சொல்லிக் கொண்டு வந்த ஒரு பெண்மணியும் கூடவந்த இரண்டு மூன்று நபர்களும் 'மெடிக்கல் செக்அப்' என்று சொல்லி அந்த வயதான விதவையை இருபத்தைந்து கிலோமீட்டர் தூரத்திலுள்ள ஒரு 'காம்ப்'பிற்கு அழைத்துச் சென்று வலுக்கட்டாயமாக அவருக்குக் குங்குமமும், சிந்தூரும் அப்பி, சுமங்கலியாக்கினார்கள்! அழுது புரண்ட அப்பாவிப் பெண்மணிக்கு 'இருபதாயிரம் ரொக்கமும், ஒரு பிளாட் நிலமும்' தருவதாகப் பொய்யான வாக்களித்து, கருத்தடை ஆபரேஷன் செய்து விட்டனர்.

''குடும்பக் கட்டுப்பாடு குறியீடு'' எட்ட முடியாததாகி விடும் போது இந்த மாதிரி விரும்பத்தகாத நிகழ்சிகள் நேர்ந்து விடுகின்றன. சுமார் ஒரு வாரம் முன்னால் தான் ஓர் இருபத்தைந்து வயதுப் பெண் 'கருத்தடை ஆபரேஷன்' நடக்கும் போதே இறந்து போனார். பொது மக்கள் கொதித்துப் போய் இருக்கின்றனர்.

- இருள் நீக்கி கணேசன்

## கல்கத்தா கடிதம் :

நேதாஜிக்கு பாரத ரத்னா விருது வழங்கப்பட்டிருப்பது வங்கத்தில் ஒரு பெரும் சர்ச்சையைக் கிளப்பி விட்டிருக்கிறது. வங்காளிகளுக்கு நேதாஜி தெய்வம் மாதிரி. அவர் இன்னும் உயிரோடிருக்கிறார் என்று கூடப் பலர் நம்புகிறார்கள். அவ ருக்கு விருது அளித்ததைப் பல வங்காளிப் பெரியோர்களும் பொது அமைப்புகளும் கண்டித்துள்ளன.



நேதாஜி : விருதை யார் வாங்கிக் கொள்வார்கள்?

# விருதை வைத்துக்கொண்டு விழிக்கும் அரசு!

இப்போது இந்திய அரசாங்கத்தின் தலைவலி பாரத ரத்னா விருதை யாரிடம் கொடுப்பது என்பதுதான். நேதாஜியின் மனைவி உயிருடனில்லை. ஒரே மகள்-ஆஸ்திரியக் குடிமகள். வியன்னாவில் வசிக்கிறார். நேதாஜியின் அண்ணன் சரத்போசின் இரு புதல்வர்கள் சிசிர் போசும், அமிய போசும் விருதை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டனர். நேதாஜியின் வாரிசைக் கண்டு பிடிக்கும்படி மத்திய அரசு மாநில அரசுக்கு எழுதியிருக்கிறதாம்!

## சர்வீஸ் ஸ்டாம்பு மர்மம்!

மேற்கு வங்க அரசுப் பள்ளிகளில் தொடக்க வகுப்புகளில் ஆங்கிலம் கற்பிக்கப்படுவதில்லை. நடு நிலை வகுப்புகளில்தான் ஆங்கிலக் கல்வி தொடங்குகிறது. வங்காளி அறிவு ஜீவிகளில் பலரும் பல பொது அமைப்புக்களும் இந்தக் கொள்கை, மாணவர்களின் கல்வியுரிமையையும் எதிர் கால நலத்தையும் பாதிப்பதாகக் கூறி இதை எதிர்க்கின்றனர். இந்த எதிர்ப்பில் முன்னணியில் இருப்பது சோஷலிஸ்ட் யூனிட்டி சென்ட்டர் என்ற ஓர் இடது சாரிக் கட்சி. அரசாங்கக் கொள்கையை, எதிர்ப்பவர்கள் கல்வி உரிமைப் பாதுகாப்புக் கமிட்டி ஒன்று அமைத்துக் கொண்டு போராடி வருகின்றனர்.

அண்மையில் இந்தக் கமிட்டி அரசாங்கக் கொள்கைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் தபால் கார்டுகளில் பொது மக்களிடமிருந்து கையெழுத்துச் சேகரித்து முதல் மந்திரி ஜோதி பாசுவுக்கு அனுப்பியது.

அச்சடிக்கப்பட்ட ஆயிரக்கணக்கான கார்டுகள் ஒவ்வொன்றுக்கும் அறுபது காசு மதிப்புள்ள தபால் தலை ஒட்ட வேண்டும். கமிட்டி அனுப்பிய கார்டுகளில் பெரும்பாலானவற்றில் சர்வீஸ் ஸ்டாம்புகள் ஒட்டப்பட்டிருந்தன. அரசாங்க உபயோகத்துக்கு மட்டுமே அனுமதிக்கப்பட்ட சர்வீஸ் ஸ்டாம்புகள் கல்வியுரிமை பாதுகாப்புக் கமிட்டிக்கு எப்படிக் கிடைத்தன என்பது புலன் விசாரணையிலிருக்கிறது!

## பத்திரிகை அலுவலகம் மீது தாக்குதல்

நம் நாட்டில் அரசியலையும் மதத்தையும் சேர்த்துக் குழப்பும் அமைப்புகளுக்குக் குறைவில்லை. அத்தகைய அமைப்பு ஒன்று சந்தான் தளம். இதன் தலைவர் பாலக் பிரும்மசாரி.

'ஆஜ்கால்' என்ற வங்காளி தினசரியில் பாலக் பிரும்மசாரியைத் தாக்கி ஒரு கடிதம் வெளிவந்ததாம். இதனால் ஆத்திரம் கொண்ட சந்தான் தளத்தினர் பிப்ரவரி முதல் வாரத்தில் பத்திரிகை அலுவலகத்தைத் தாக்கிப் பெருத்த சேதம் விளைத்துள்ளனர். 32 பேர் கைதாகியிருக்கிறார்கள்.

– எஸ். கே. எம்.



# செண்பகத் தோட்டம்

முழுக்க முழுக்க இயக்குனரின் படம். வழக்கமான ஒரு கிராமியக் கதைக்கு அழுத்தமான அணுகுமுறையின் மூலம் விறுவிறுப்புச் சேர்த்திருப்பவர் இயக்குனர் மனோபாலா.

அவருக்குத் துணை அறிமுக இசையமைப்பாளர் சிற்பி. ஏழு பாடல்கள். சுவைக்குக் குறைவில்லை. அவருக்கு ஒரு சின்ன அப்ளாஸ்.

கதையின் மையம் காந்திமதி. அவர் வாழ்க்கையின் திருப்புமுனையாக நடந்து விட்ட ஒரு நிகழ்ச்சியின் விளைவாக அளிக்கப்பட்ட தண்டனையைச் சிறையிலும் மனநோய் விடுதியிலும் கழித்து விட்டுத் திரும்பவும் கிராமத்துக்கு வரும் அவர், உண்மையை நிரூபிக்கவும் முடியாமல், அதை உள்ளுக்குள்ளேயே விழுங்கி வைத்திருக்கவும் இயலாமல் தவித்து, தன்னைத் தவறாகக் கணித்து விட்ட மகனே ஆவேசத் துடன் தாக்க வரும் போது அரிவாளை அவரே அவன் முன் போட்டுத் தன்னைக் கொன்று விடும்படி அழைப்பு விடுப்பது உச்சம்.

மகன் செல்வா. ஒரு கட்டம் வரையில் கல்மிஷம் இல்லாத சிரிப்பு, விளையாட்டு, வேடிக்கை, காதல், ஊடல், தாயைப் பற்றிய அந்தப் பயங்கர ரகசியத்தைத் தெரிந்து கொண்ட பின் அவை அனைத்தும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய் அவரை ஆக்ரமித்துக் கொள்ளும் ஆக்ரோஷம்... அண்ணனுக்குத் தம்பி சோடையில்லை.

வில்லன் பண்ணையார் கே. பிரபாகரன். 'ஸ்டாண்டர்டைஸ்' செய்துவிட்ட வெல்வெட் சிரிப்பு - உள்ளுக்குள் தேக்கி வைத்துள்ள நாக விஷம். பழகப் பழகப் பாலும் புளிக்கும். மாறுதல் தேவை.

வித்தியாச செந்தில். வழக்கத்திலிருந்து அவ்வாறு மாறுபட்டிருப்பதே தனி சுவை. பின்னணியில் அழகு சேர்ப்பது குற்றால அருவி மட்டுமல்ல. பாலகுமாரனின் வசனமும்தான்.

- சி. ஆர். கே.

## 20

**மீ**ரா அதிர்ச்சியுடன், ''சேச்சே, இருக்காது'' என்றாள். ''அவங்க அம்மாவை நான் நர்சிங் ஹோமிலே பார்த்தேன். வயிற்திலே கட்டின்னாங்க!''

''சரியான மக்கு நீ!'' என்று நந்தினி சிரித்தாள். ''உங்கிட்ட பின்னே வேற எப்படிச் சொல்வாங்க?''

மீரா பதில் சொல்லாமல் மௌனமாக நடந்தாள். நந்தினி இந்த விஷயத்தை ரொம்பவும் சந்தோஷமாகச் சொல்வதுபோல் இருந்தது.

''மீனாட்சியை நினைச்சு எனக்குப் பாவமா இருக்கு நந்தினி!''

''எதுக்குப் பாவமா இருக்கணும்?'' என்றாள் நந்தினி ஆவேசத்துடன். ''அவளா கேட்டுக்கிட்டு வாங்கிக்கிட்டது தானே? அவளுடைய நடத்தையே சரியில்லேன்னு எல்லாருக்கும் தெரியும், அவங்க அம்மாவைத் தவிர.''

அதனால்தான் பாவம் என்று மீரா நினைத்துக் கொண்டாள்.

நந்தினி இன்னும் ரகசியக் குரலில் ''அவங்க அம்மாவே சரியில்லேன்னு சொல்றாங்க. இவ பின்னே வேற எப்படி இருப்பா?'' என்றாள். ''ஆனா டாக்டர் கிட்ட ஒ ரே ய டி ய ா சாதிக்கிறாங்களாம் பொண்ணு அப்படியெல்லாம் போகக் கூடியவ இல்லே, இது கர்ப்பம்னு தன்னாலே நம்ப முடியலே கட்டியாத்தான் இருக்கும்ங்கறாங்களாம், எப்படி?''

நந்தினியின் இடத்தில் அவளுடைய அம்மா நிற்பதுபோல் இருந்தது. கூடு விட்டுக் கூடு பாய்வது என்பது அத்தைப் பாட்டியின் கதைகளில் வரும். நந்தினியின் அம்மாவிற்கு அப்படிப்பட்ட சாமர்த்தியம் இருக்கும் என்று தோன்றிற்று.

''உனக்கெப்படி இதெல்லாம் தெரியும் நந்தினி?''

''அந்த டாக்டர் எனக்கு அத்தையாகணும்!'' என்றாள் நந்தினி பெருமையுடன். ''ஆனா அத்தை இந்த விஷயத்தைச் சொன்னாங்களோ இல்லையோ எங்க அம்மாவுக்கு இன்னும் அதிகமா பயம் ஏற்பட்டுப் போச்சு. இங்கே போகாதே அங்க போகாதேன்னு ஏக முட்டுக்கட்டை இப்ப. என்னைப் 'பாக்' பண்ணி அனுப்பிச்சடணும்னு தீவிரமாயிட்டாங்க.''

''அப்படின்னா?''

நந்தினி வெட்கத்துடன் சிரித்தாள். ''கல்யாணம் பண்ணிடப் போறாங்களாம்.''

மீரா சடக்கென்று திரும்பினாள். ''இத்தனை சீக்கிரமா? என்ன வயசு உனக்கு?''

# காதலெனும் வானவில்



''பதினெட்டு, எங்கம்மாவுக்குப் பதினைஞ்சு வயசிலே கல்யாணம்.''

''மேலே படிக்கப் போறதில்லையா நீ?''

'''கல்யாணம் செய்துகிட்டு, புருஷன் படின்னு சொன்னா படி' அப்படினு எங்க அம்மா சொல்றாங்க.''

எத்தனை விசித்திரமான சமாதானம் என்று நினைத்து மீராவுக்குச் சிரிப்பு வந்தது.

''உனக்கே கல்யாணம் பண்ணிக்கணும்னு விருப்பம் இருக்கற மாதிரி இருக்கு.''

''ஓரளவுக்கு உண்மைதான்'' என்றாள் நந்தினி. ''பின்னே என்ன மீரா, எப்பப் பார்த்தாலும் இங்கே போகாதே அங்கே

போகாதே, இதை படிக்காதே அதைப் பார்க்காதேன்னு தடை போட்டுக்கிட்டே இருக்காங்க வீட்டிலே. எப்படாப்பா இந்த வீட்டை விட்டுக் கிளம்பப் போறோம்னு ஆயிட்டது எனக்கு. கல்யாணமானா கொஞ்சம் சுதந்திரம் இருக்கும்.''

''யாரைக் கல்யாணம் பண்ணிக்கிறதுன்னு தீர்மானம் பண்ணிட்டியா?''

''ஐய்யய்யோ, நானா? எங்கம்மா யாரைத் தீர்மானிக்கிறாங்களோ அவன் தான்.''

மீரா அனுதாபத்துடன் நந்தினியைக் கூர்ந்து பார்த்தாள்.

''முன்னே பின்னே தெரியாதவனையா?''

''ஆமாம், பின்னே?'' என்று நந்தினி இயல்பாகச் சிரித்தாள்.

''எந்த ஆளோடையும் பழகறதுக்கு சான்ஸ் இல்லேங்கறதை விடு, அப்படிப் பட்ட வம்பிலேயெல்லாம் மாட்டிக்கிட்டேன்னா மீனாட்சியுடைய அம்மா மாதிரியெல்லாம் இருக்க மாட்டாங்க எங்க அம்மா. முதுகுத் தோலை உறிச்சிடுவாங்க.''

''எனக்கு இதையெல்லாம் புரிஞ்சுக்க முடியல்லே நந்தினி!'' என்றாள் மீரா குழப்பத்துடன்.

''நீ அமெரிக்காவிலே வளர்ந்தவ. அதனாலேதான் மீனாட்சி செஞ்சது தப்பில்லேங்கறே!''

''நா அப்படியெல்லாம் எதுவும் சொல்லல்லே நந்தினி!'' என்றாள் மீரா அவசரமாக. ''மீனாட்சி ஏமாந்து போனதுக்கு எத்தனையோ காரணம் இருக்குன்னு நா நினைக்கிறேன்.''

''என்ன காரணம், திமிர் என்கிறதைத் தவிர!''

மீரா பதில் ஏதும் சொல்லவில்லை, 'அவன் என்னை நிராகரிச்சா நா செத்துருவேன்' என்று அன்று மீனாட்சி அழுதது கண்ணில் நின்றது.

''அவ நிஜமாகவே ஒருத்தனை ரொம்பக் காதலிச்சா நந்தினி!''

''ஆமாம் பெரிய காதல்! இப்பப்பாரு அடுத்த வருஷமே அவங்க அம்மா பார்த்து வைக்கிற ஒரு பணக்காரனைச் சந்தோஷமா கல்யாணம் செய்துப்பா, நான் பந்தயம் கட்டறேன்!''

''செய்துக்கலாம். ஆனா சந்தோஷமா செஞ்சுப்பாளான்னு எனக்குத் தெரியாது.''

''எனக்குத் தெரியும் நிச்சயமா'' நந்தினிக்குத் தன்னைவிட இருபது வயது அதிகம் என்று மீராவுக்குத் தோன்றிற்று.

''ஆனா அவனுடைய பழைய சரித்திரம் தெரிஞ்சு போச்சுன்னா புருஷன் சந்தோஷமா இருப்பானான்னு தெரியாது'' என்று ஹாஸ்யம்போல் நந்தினி சொல்லிச் சிரித்தது அதிர்ச்சியைத் தந்தது.

''கல்யாணத்துக்கு முந்தி எல்லாத்



தையும் மறைச்சுடுவாங்கன்னு நினைக்கிறியா?''

''பின்னே?'' என்றாள் நந்தினி சவால் விடுவதைப் போல. ''கர்ப்பமானவன்னு தெரிஞ்சா எவன் கல்யாணம் செய்துப்பான்?''

நந்தினி சொல்வதெல்லாம் இன்று அதிர்ச்சியைத் தந்தது. இப்படிப்பட்ட கோணத்தில் தன்னால் சிந்தித்திருக்க முடியாது என்று தோன்றிற்று.

''ஆனா நீ சொல்றமாதிரி, மறைக்கிறது இன்னும் ஆபத்திலே முடியலாம் நந்தினி.''

''ஆபத்து வரும்போது சமாளிக்கிறது மீனாட்சியுடைய சாமர்த்தியத்தைப் பொறுத்தது. அவ அம்மாவை வெச்சுப் பார்த்தம்னா இவளும் சமாளிச்சுக்குவான்னுதான் தோணுது.''

நந்தினி பக பகவென்று சிரிக்கும்

போது மீராவுக்கும் சிரிப்பு வந்தது.

''நீ இத்தனைப் பொல்லாதவன்னு எனக்குத் தெரியாது நந்தினி!''

''இது பொல்லாத்தனம் இல்லே. ஞானம்! உன்னுடைய அமெரிக்க மூளைக்கு இதெல்லாம் விளங்கறதுக்கு ரொம்ப நாள் ஆகும். அங்கெல்லாம் இப்படி இல்லே, இல்லே?''

''ஏமாத்தல் என்கிறது எல்லா ஊர்லேயும் இருக்கும்தான்'' என்றாள் மீரா தீவிரமான யோசனையுடன். ''ஆனா அங்க இங்கே இருக்கிற மாதிரி பயங்கள் இல்லே. அதுவே வேற உலகம் போல இருக்கு நந்தினி. முன்னே பின்னே தெரியாத ஆளை எப்படிக் கல்யாணம் செய்துக்க முடியும்னு எனக்கு இன்னும் புரியல்லே.''

''தெரிஞ்சவனையே நீ செய்துக்கோ மீரா!'' என்று நந்தினி சிரித்தாள்.

''எனக்கு எங்கம்மா பார்க்கிற ஆளு போதும். தெரிஞ்சவன்னு நாம பழகற ஆள் மீனாட்சியை ஏமாத்தினவன் மாதிரி இருந்தான்னா?''

''மீனாட்சி ஒரு அசடு நந்தினி. அதை அந்த மணி உபயோகிச்சுக்கிட்டான்.''

''அட, பெயரெல்லாம் உனக்குத் தெரியுமா?''

சட்டென்று மீரா உஷாரானாள்.

''ஒரு நாள் எனக்கு அவனை மீனாட்சி அறிமுகப் படுத்தினாள்.''

லலிதாங்கியின் நினைவு மீராவுக்கு எதிர்பாராமல் வந்தது. அவள் சமீபத்தில் கல்யாணம் செய்து கொண்டு அமெரிக்கா சென்றதைப் பற்றி நந்தினிக்குத் தெரியுமா என்று கேட்க நினைக்கையில் அவர்கள் ஏற வேண்டிய பஸ் வந்து நின்றது. பஸ்ஸில் இடம் பிடித்து உட்கார்ந்தபோது வேறு வேறு இடத்தில் அமரும்படி ஆயிற்று.

லலிதாங்கியும் நாகராஜனும் பதிவுத் திருமணம் செய்து கொண்டு அம்மாவையும் அப்பாவையும் பார்க்க வந்திருந்தார்கள். லலிதாங்கியின் முகத்தில் தெரிந்த சந்தோஷத்தை நினைத்து மீராவுக்கு இப்பவும் பிரமிப்பேற்பட்டது. காதல் என்பது பரிபூரண ஆனந்தம் என்றால், அதை லலிதாங்கி உணர்ந்தவள் என்று தோன்றிற்று. வயது என்பதன் பிரக்ஞையே நழுவிப் போனதுபோல் இருந்தது. ஆனால் உள்ளே அம்மாவிடம் மஞ்சள் குங்குமம் வாங்கிக் கொள்ளும்போது குரல் தழு தழுக்கச் சொன்ன வார்த்தைகள் மறக்க முடியாதவை. ''எனக்கு இப்ப சரீர சுகம் என்கிறது முக்கியமில்லே சுஜாதா, தோழமைதான் முக்கியம். இதை என் தங்கைகளே புரிஞ்சுக்க மாட்டேங்கறாங்க.''

நந்தினியின் அம்மாவும் புரிந்து கொள்ளாத வர்க்கத்தைச் சேர்ந்தவள், என்று மீரா நினைத்துக் கொண்டாள். அவளைப் போலவே நந்தினியும் பேசினால் ஆச்சரியப்படுவதற்கில்லை. அம்மா பிறகு சொன்னது போல, சரீர சுகம்தான் முக்கியம் என்று லலிதாங்கி நினைத்திருப்பாளானால் அவளுடைய கதை என்றோ வேறு மாதிரி இருந்திருக்கும்.

''பரீட்சை முடிஞ்சதும் டான்ஸை மறுபடி ஆரம்பிச்சுடு கண்ணு'' என்று ஆதங்கத்துடன் சொன்னாள். ''வெறும் படிப்பு மட்டும் மனுஷனுக்குப் பத்தாது. இப்படிப்பட்ட கலையெல்லாம் கத்துக்கறது மனசை டிஸிப்பிளின் படுத்தும். யோக நிலை அது. அனுபவத்திலே சொல்றேன்'' என்ற போது, முதல் நாள் அவளிடம் பாடம் கற்கத் துவங்கியதும் உடம்பும் மனசும் சிலிர்த்து நின்ற மாதிரி இப்பவும் சிலிர்த்தது. இப்படிப்பட்ட ஒரு ஆசிரியை கிளம்பிப் போகிறாளே என்று துக்கம் ஏற்பட்டது.

''அமெரிக்காவுக்கு நீ வந்தியானா தெரியப்படுத்து'' என்று உச்சி முகர்ந்து கண்ணில் நீர் மல்கச் சொல்லிவிட்டு லலிதாங்கி நகர்ந்த போது, தோழமை ஒன்றுக்காக மட்டுமே அவள் இந்த இடத்தை விட்டுக் கிளம்புவதாக மீராவுக்குத் தோன்றிற்று.

அமெரிக்க வெளியில் லலிதாங்கியை இருத்திப் பார்ப்பது கஷ்டமாக இருந்தது. 'லலிதாங்கி மேமின் காதல்தான் உண்மை



யானது' என்று நந்தினியிடம் சொன்னால் அதற்கும் அவள் பரிகாசமாகச் சொல்லலாம் - ''சீச்சி, இத்தனை வயசு கழிச்சா?''

இதற்கெல்லாம் வயது வரம்பு உண்டு என்று நினைப்பதே மீராவுக்கு அபத்தமாகப் பட்டது. 'சீச்சி' என்று அதை ஏதோ அசிங்கம் போல் ஒதுக்குவது வேடிக்கையாக இருந்தது. எரிக்கிற்கும் இப்படிப் பட்ட இந்திய மனக்கூச்சங்களைப் புரிந்து கொள்ள முடியாது என்று அவள் நினைத்துக் கொண்டாள். அவனிடமிருந்து கடிதம் வந்து வெகு நாட்களாகி விட்டன. காதலி கிடைத்திருப்பாள் என்று அவள் தனக்குள் சொல்லிச் சிரித்துக் கொண்டாள். எரிக் நல்ல மனசுடையவன். பொறுமையும் கண்யமும் மிக்கவன். காதலியைச் சந்தோஷமாக வைப்பான்.

''உன்னுடைய 'ஸ்டெடி டேட்' யார்?'' என்று அவன் சென்ற கடிதத்தில் கேட்டிருந்தான்.

நான் இன்னும் டேட்டிங்கே ஆரம்பிக்கவில்லை என்றால் அவன் ஆச்சரியப் படுவான். எனக்கு இருப்பது ஒரே சினேகிதன். நான் எப்படி இருக்கிறேன் என்று கூட பார்க்கும் சக்தி அற்றவன். 'டேட்' செய்ய முடியாதவன்....

**ந**ந்தினி இறங்கிச் சென்று விட்டாள். அடுத்த ஸ்டாப்பிங்கில் இறங்கி மீரா நடக்க ஆரம்பித்தாள். அவளுக்கு முன்னால் வெள்ளைத் தடியை நீட்டிக் கொண்டு சென்று கொண்டிருந்த ஆளைக் கண்டு திடுக்கிட்டாள்.

ஒரு பக்கமாக, உத்தேசமான நோக்கில் ஹரி நடந்து கொண்டிருந்தான். குபீரென்று அவளுள் பிரவாகமாய்ச் சந்தோஷம் பரவிற்று. 'ஹரி!' என்று கூவ நினைத்த சமயத்தில் அவன் எதிரில் வந்த ஆளிடம் ''35 ம் நம்பர் எங்கேயிருக்குன்னு சொல்ல முடியுமா?'' என்றான். அவளுடைய வீட்டு நம்பர்.

''35 ம் நம்பர்....'' என்று அந்த ஆள் தெருவில் பார்வையைச் சுழற்றுகையில் அவள் சமிக்ஞையில் 'நான் சொல்கிறேன் இவன் எனக்குத் தெரிந்தவன்' என்று தெரிவித்தாள்.

''நான் காண்பிக்கிறேன்'' என்று அவள் ஹரியின் கையைப் பற்றியதும், ஹரியின் முகத்தில் சட்டென்று ஒரு பிரகாசம் படர்ந்தது.

''மீரா!'' என்றான் சந்தோஷத்துடன். ''எனக்குத் தெரியும் நீ எப்படியோ இப்ப வந்து நிப்பேன்னு!''

''எப்படி?'' என்று அவள் சிரித்தாள்.

''பிரியம் என்கிறதுக்கு அப்படிப்பட்ட சக்தி உண்டு மீரா!'' என்றான் அவன் பரவசத்துடன்.

அவளுக்குச் சிலிர்த்துப் போயிற்று.

(தொடரும்)

# அருள்வாக்கு



**எ**ல்லாஸ்வாமிக்கும் தநுஸ் உண்டு. அந்த தநுஸுக்கு என்று ஒரு தனிப் பெயரும் உண்டு. பரமசிவன் கையில் வைத்திருக்கிற தநுஸுக்குப் 'பிநாகம்' என்று பெயர். அதனால் அவருக்கே 'பிநாகபாணி' என்று ஒரு பேர்,

மஹாவிஷ்ணுவுக்குச் 'சா ர ங் க பா ணி' என்று ஒரு பேர் சொல்கிறார்கள். 'சார்ங்கம்' என்பது மஹாவிஷ்ணுவின் கையில் இருக்கப்பட்ட வில். விஷ்ணு ஸஹஸ்ரநாம கடைசி ஸ்லோகத்திலும் சார்ங்கத்தைச் சேர்த்து ஐந்து ஆயுதங்களே சொல்லியிருக்கிறது. 'தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை போல்' நன்றாக வர்ஷிக்கட்டுமென்று ஆண்டாள் திருப்பாவையில் பாடியிருக்கிறாள்.

ஸாக்ஷாத் பராசக்தியும் ராஜராஜேச்வரியாக இருக்கும் போது இக்ஷுதநுஸ் என்பதாகக் கரும்பு வில் வைத்துக் கொண்டிருக்கிறாள். மன்மதனுக்கும் இதுவேதான் ஆயுதம்.

தநுஸுக்கு இப்படி விசேஷமிருக்கிறது. எல்லாவற்றுக்கும் மேலே, இத்தனை தெய்வங்களாயும் ஆயிருக்கிற நிர்குணப் பிரம்ம வஸ்துவை அடைவதற்கும் உபநிஷத்திலேயே தநுர்வித்தை அப்யாஸத்தைத்தான் உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. சிஷ்யனைப் பார்த்துகுரு, 'ஸௌம்யா! உபநிஷத்திலேயிருக்கிற மிகப் பெரிய அஸ்திரமான, மஹாஸ்த்ரமான வில்லை எடுத்துக் கொண்டு, அதிலே உபாஸனையாலே நன்றாகச் சாணை தீட்டி கூராயிருக்கிற அம்பைப் பூட்டி, அக்ஷரமான குறியை நோக்கி, அதுவாகவே ஆகி விடும் பாவனையோடு விடு' என்பதாகச் சொல்லியிருக்கிறது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**



# பாலம்

## மனமொத்த மாறுதல்...?

காய்தே மில்லத் மாவட்டம், திருத் துறைப்பூண்டி ஒன்றியத்தில் நடுநிலைப் பள்ளியில் பட்டதாரி தலைமை ஆசிரிய ராகப் பணியாற்றி வருகிறேன். சென்னை நகரைச் சுற்றி, 50 கிலோ மீட்டர் வரை பணி புரியும் நடுநிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர்கள் யாரும் மனமொத்த மாறுதல் மூலம் திருத்துறைப்பூண்டி வர விரும்பி னால் தொடர்பு கொள்ளவும்.

- எஸ். கந்தசாமி,
தலைமை ஆசிரியர்,
ஊ. ஒ. ந. பள்ளி,
விளக்குடி (போஸ்டு)
திருத்துறைப்பூண்டி - 614 715.

## நூல்கள் வெளியிட....

கிறிஸ்துவ மதம் சம்பந்தமாகக் கருத்துச் செறிவுள்ள கட்டுரைகள் - குறிப் புக்கள் பலவற்றை வைத்துள்ளேன். ஒரு நல்ல நண்பர் - பொருள் வசதியுள்ளவர் கிடைத்திடின் அவருடன் இணைந்து அவற்றை வெளியிடல் நன்று என்று எண்ணுகிறேன். அத்தகு நண்பர் ஒருவரைப் 'பாலம்' மூலம் தேடுகிறேன்.

- ம. ஜெயப்பிரகாஷ்,
தொலைபேசி இணைப்பகம்,
பொள்ளாச்சி - 642 001

## விதவைக்கு மறுவாழ்வு

துரதிர்ஷ்டவசமாக விதவையாகி விட்ட ஒரு பெண்ணுக்கு மறுவாழ்வு தர உறுதி பூண்டிருக்கிறேன். ஜாதி - மதம் - பொருளாதார நிலை இவை பார்க்கப் போவதில்லை. சுமாரான அழகில் எனது 23 வயதை விடக் குறைந்த வயதினரை மணக்க விரும்புகிறேன். எளிய முறையில் பதிவுத் திருமணம்.

- ஈதெர். சத்தித் அனந்தராஜ்,
45, தேர்முட்டி,
காரமடை,
கோவை - 641 104.

## இலவச சேவை

வருமான வரி கணக்கா? விற்பனை வரி கணக்கா? இலவச சேவைக்கு அணுக வும் :

- வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
A. P. 1265, 77வது தெரு,
செக்டார் 12,
கே. கே. நகர்,
சென்னை - 600 078.

## வாய்ப்புத் தேடுகிறேன்!

1977 -ம் ஆண்டு ஐ.டி.ஐ. வார்ப்பியல் பிரிவில் (Moulding) தேர்ச்சி பெற்று, 1979 ம் ஆண்டு அப்ரெண்டிஸ் தேர்வில் அதிக மதிப்பெண் பெற்று தமிழகத்தி லேயே முதல் மாணவனாகத் திகழ்ந்தேன். என்றாலும் என் திறமைக்கேற்ற வேலை இன்னும் கிடைக்காமல் சைக்கிள் உதிரி பாக விற்பனைக் கடையில் வேலை பார்க் கிறேன். 35 வயது இளைஞனான எனக்கு வாய்ப்புத் தருவார் உண்டா?

- தி. நடராஜன்,
83/1, முனியப்ப நாயக்கன் தெரு,
பெரம்பூர்,
சென்னை - 600 011.

## யந்திர, மந்திரப் பிரயோகங்கள்

ஷண்மத தெய்வங்கள் மற்றும் ஸ்ரீவித்யா பற்றிய யந்திர, மந்திர, தந்திரப் பிரயோகங்கள். துதிகள் அறிய ஆவல். மூலகிரந்தங்கள், பாஷ்யங்கள் படிக்க, குறிப்பெடுக்க, சாதனை புரிய விருப்பம். கிரந்தங்கள் தம் வசம் உள்ளவர்களும் சந்தேக விளக்கம் தரக்கூடியவர்களும் தொடர்பு கொண்டால் பேருதவியாய் இருக்கும்.

- டி. பி. சுப்பிரமணியன்,
115, லோகநாதன் சாலை,
கிருஷ்ணாபுரம்,
அம்பத்தூர்,
சென்னை - 600 053.

யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்தின் நட்புக்குரிய நபரிடம் நிகழ்ந்த உண்மையான அனுபவம்.

# "யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்தின் நட்புக்குரிய நபரை நாங்கள் டிவியில் கண்டோம், நாங்கள் அவரை அழைத்தவுடன், அதிசயிக்கத்தக்க தூய்மை முறையை இயக்கிக் காட்டினார்"



தினமும் யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்தின் நட்புக்குரிய நபர் நவீன தூய்மை மற்றும் சுகாதாரத்தின் நற்பயன்களை குடும்பங்கள் அறிந்து கொள்ள உதவுகிறார்.

நீங்களும் அவரை வரவேற்கலாம். வசதியான உங்கள் வீட்டில் அவர் யூரோக்ளீன் மைட்டி வேக் தூய்மை முறையை இயக்கிக் காட்டுவார். மற்றும் கண்ணுக்குப் புலப்படாத தூசு மற்றும் அழுக்குகளிலிருந்து வீட்டைத் தூய்மையாக வைக்கும் எளிதான வழிகளை விளக்குவார்.

அக்வாகார்ட் ஆன்லைன் வாட்டர் ஃபில்டர்-கம்-ப்யூரிஃபையரின் ஸ்விட்சை இயக்கியதும் தூய பாதுகாப்பான குடிநீர் பெறும் வழியையும் உங்களுக்குக் காட்டுவார்.

யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்திலிருந்து வரும் நட்புக்குரிய நபரின் பேச்சில் நம்பிக்கை தொனிக்கும். இது இயற்கையே. ஏனெனில், இந்தியாவில் உள்ள இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் மற்றும் வெற்றியுடன் திகழும் விற்பனை நிறுவனத்தின் உறுப்பினர் அவர். இந்நிறுவனம், விற்பனைக்குப் பின் நம்பகமான சேவை பின்பலத்தைக் கொண்டது.

உங்கள் வீட்டிற்குள் ஒரு முறை வந்ததும், அவர் எடுத்துக் கொள்ளும் நேரம் 30 நிமிடங்களுக்கு மேலாகாது.

**இப்பொழுதே அவரை அணுகலாம். உங்கள் குடும்பத்தின் நலத்திற்காக.**

எழுத வேண்டிய முகவரி:
யூரேகா ஃபோர்ப்ஸ் லிட்., த.பெ. எண் 936, ஜி.பி.ஓ. பம்பாய்-400 001.

**யூரோக்ளீன்**
அனைத்துப் போக்குத் தூய்மை முறை
வேக்யூம் க்ளீனரை விட மேலானது

**அக்வாகார்ட்**
ஆன்லைன் வாட்டர்
ஃபில்டர்-கம்-ப்யூரிஃபையர்

யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்
நவீன தூய்மை மற்றும்
சுகாதாரத்தில் முன்னோடிகள்



TRITON/91/EFL 160 TM

# மௌன விலங்கு

மாமனார் பால் பாத்திரத்தைக் கொண்டு வந்து சமையலறையில் வைத்துவிட்டுப் போனார். அவனுக்குப் பிடித்த பால் பாயசம் செய்வதற்காக இன்று இரண்டு லிட்டர் பால் அதிகப்படியாக சொல்லி வைத்திருந்தாள். பால் காய்ந்ததும் காப்பி போட்டுக் கொண்டு வந்து மாமனாரிடம் கொடுத்தாள்.

இன்னும் அவன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். மல்லாந்து கால்களையும் கைகளையும் நன்றாக விரித்துக் கொண்டு லேசாக வாய் திறந்து தூங்கிக் கொண்டிருந்த விதத்திலேயே அவனது ஆளுமை தெரிந்தது. படுக்கையில் சுவரை ஒட்டினாற்போல காலியாக இருந்த மிகச்சிறிய இடத்தில் தூங்கிப் பழகிப் போய்விட்டது அவளுக்கு. தூங்கும் போது அவளது கையோ காலோ தற்செயலாகப் படுவதுகூட அவனுக்குப் பிடிப்பதில்லை.

காப்பியை ஸ்டூலின் மீது வைத்துவிட்டு அவனது தோளைத் தொட்டு எழுப்பினாள். தூக்கம் கலைந்தும் கலையாமலும் லேசான, விரோதத்தோடு அவளைப் பார்த்தான். அவளது மிதமிஞ்சிய புன்னகை அவனை ஆசுவாசப் படுத்தியது போல திரும்பிப் படுத்துக் கொண்டான். அவள் லேசான ஏமாற்றத்தோடு மீண்டும் அவனை உசுப்பி, ''காப்பிங்க'' என்றாள். அவன் எழுந்து உட்கார்ந்து வாங்கிக் கொண்டான். அவளும் அவனது பக்கத்தில் உட்கார்ந்தாள். அவனது கழுத்தில் ஸ்டிக்கர் பொட்டு ஒட்டியிருந்ததைத் துடைத்து விட்டாள். காப்பி தம்ளரை ஸ்டூலில் வைத்து விட்டு மறுபடியும் படுக்கையில் கவிழ்ந்து கொண்டான்.

''எழுந்திருங்களேன்..... ப்ளீஸ்'' என்றாள்.

''என்ன அவசரம்? ஏழு மணிதானே ஆச்சு? அதுக்குள்ள



ஏன் எழுப்பிவிட்டுக்கிட்டிருக்க?''

''இன்னிக்குப் பால்பாயசம் பண்ணட்டுமாங்க?''

''எதுக்கு?''

''இந்தப் பக்கம் திரும்பித்தான் கேளுங்களேன்.''

அவன் திரும்பாமல் பொதுவாக, ''எதுக்கு?'' என்றான்.

அவள் எதுவும் சொல்லாமல் எழுந்து உள்ளே போனாள். தண்ணீர் வர ஆரம்பித்து விட்டது. அவன் குளிப்பதற்காக பக்கெட்டில் நிறைத்து வைத்தாள்.

அவள் தண்ணீர் பிடித்து முடித்ததும் மாமனார் 'ஹோசை' செருகி, தோட்டத்துக்குத் தண்ணீர்ப் பாய்ச்சத் துவங்கி னார்.

இன்றைக்கு ஆஃபிஸ் போவதில்லை என்று நேற்றே தீர்மானித்திருந்தாள். அக்கவுண்டண்டிடம் சொல்லக்கூட செய்தாயிற்று. அக்கவுண்டண்ட் மிகையாக வழிகிற ஆசாமி தான். என்ன விஷயம்? மாமி, மாமனார் வீட்ல இல் லையா?'' என்றார் எதோ குறும்பாகக் கேட்பது போல்.



ஏதாவது சூடாகச் சொல்ல வேண்டுமென்று தோன்றியதைக் கட்டுப்படுத்திக் கொண்டு ''வீட்ல வேலை இருக்கு சார்'' என்றாள்.

இன்று மட்டுமில்லை. எப்போதுமே இப்படித்தான். கோபத்தையும் துக்கத்தையும் அடக்கி அடக்கியே பழகிப் போய் விட்டது. அப்படிக் கோபத்தை வெளிக்காட்டினால் கூட செயற்கையாக, வெறும் நடிப்புமாதிரி கேலியை ஏற் படுத்திவிடுமோ என்ற மாதிரியான பயம் கூட ஏற் பட்டுப் போய் விட்டது.

ஆஃபிசில் அவளு டைய ஒரே சிநேகிதன் விஷ்ணு மட்டுந்தான். அதற்குக் கூட அவள் பகீ ரதப் பிரயத்தனம் செய்ய வேண்டியிருந்தது. அவன் நாற்பது வார்த்தை பேசி னால் அவளிடமிருந்து நான்கு வார்த்தைகள்தான் வரும். ஆரம்பத்தில் மற்ற வர்களின் மேல் இருந்தது போன்ற கோபம் அவன் மீதும் இருந்தது. அவன் மிகவும் அபத்தமாகவும், அசட்டுத்தனமாகவும் பேசுவதாக அவள் நினைத்துக் கொண்டிருந் தாள். அது களங்கமின்றி இருப்பதாக மெல்ல மெல்ல, பின்னாளில் உணரத் துவங்கியபோது அவன் மீது ஒரு ஈர்ப்பும் வந்துவிட்டது. லோன்ஸ் செக்ஷனில் வேலை பார்க்கும் யவனிகாவை அவன் விரும்புவதாகத் தெரிந்து கொண்ட பிறகு மெல்ல மெல்ல அவனிட மிருந்து தன்னை விலக்கிக் கொண்டு விட்டாள். ஆனால் அவன் அவளைத் தேடி வந்து பேசுவதை நிறுத்தவில்லை. அவள் ஒரு நாளும் அவனைத் தேடிச் சென்றதில்லை. ஒரு நாள் ஆஃபிஸ் வராவிட் டால் கூட அடுத்த நாள் அவனது சீட்டுக்குப் போய், ''ஏன் லீவு?'' என்று கூடக் கேட்ட தில்லை. மறுபடியும் அவ னாக அவளிடத்திற்கு வரும் போதுதான் அதுபற்றி விசாரிப்பாள். அது குறித்து அவளுக்கும் வருத்தம்தான்.

''டெத் பெட்ல கெடந்தாக் கூட நான்தான்

அஷோக்ராஜா

உங்களைத் தேடி வரணும் இல்லையா?'' என்றான்.

அவள் மௌனமாக இருந்தாள்.

''இப்படி நீங்க இருக்கறதுக்கு ரெண்டே ரெண்டு காரணந்தான் இருக்க முடியும். என்மேல உங்களுக்கு நம்பிக்கை இல்லை. இல்லாட்டி உங்கமேலயே உங்களுக்கு நம்பிக்கை இல்லை.''

''எப்படி வேணும்னாலும் நெனச்சுக்குங்க. என்னால அது முடியாது. எனக்குப் பிடிக்கல.''

''ஆல் ரைட். என்னையும் வர வேண்டாம்னு சொல்லிடுங்க. ஒன்ஸ் ஃபார் ஆல்.''

அவள் அதிர்ச்சியோடு அவனைப் பார்த்தாள்.

அவன் சீட்டுக்குப் போய் தனது பையை எடுத்துக் கொண்டு அக்கவுண்டண்டிடம் பர்மிஷன் சொல்லிவிட்டுக் கிளம்பினான்.

அதன் பிறகு அவன் அவளைத் தேடி வருவதை நிறுத்திக் கொண்டான். அவளை எதிரில் பார்க்க நேர்ந்தால் கூடப் பார்க்காதது போல காட்டிக் கொண்டான். அவளோடு நேரிடையாகப் பேசுவதைத் தவிர்த்து, ஆஃபிஸ் சம்பந்தமான எல்லா விஷயங்களையும் பியூனிடம் சொல்லி அனுப்பினான். அப்போதெல்லாம் அவளுக்குத் தன் பேரிலேயே கோபம் பிறந்தது. தன்னுடைய மௌனம் நிறைந்த பிடிவாதமான அமைதியின் மீது, எதையும் வெளியிடத் தெரியாத, தனக்குள்ளேயே வாழ்ந்து கொண்டிருக்கிற தன் மனோபாவத்தின் மீது, வெறுப்பாக இருந்தது. அவன் முற்றிலுமாகப் பேசுவதை நிறுத்திக் கொண்டு விட்ட பிறகு அந்த மௌனமே அந்த வருத்தத்திலிருந்து அவளை மீண்டு வரச் செய்தது. கூடவே பிறந்துவிட்ட இந்த சுபாவத்தை அத்தனை எளிதாக மாற்றிக் கொண்டு விட முடியாதென்று நினைத்துக் கொண்டாள்.

அந்தச் சமயத்தில்தான் அவளுக்குத் திருமணம் நிச்சயமாயிற்று. அவளுக்கு வரப்போகிறவனைக் குறித்து நிறையக் கனவுகள் இருந்தன. அவளது கணவன் உயரமாக, விரிந்த தோள்களோடு, திரண்ட கால்களோடு ஒரு கால்பந்து வீரனைப் போல இருக்க வேண்டுமென்று நினைத்திருந்தாள்.

அவளுக்குப் பார்த்த கணவன் ஏறக் குறைய அவளது உயரமே இருந்தான். கறுப்பாகவும், குண்டாகவும் இருந்தான். தடித்த கண்ணாடி அணிந்து, சட்டைக்கு மேலே தொந்தி கூடத் தெரிந்தது. இவை எல்லாவற்றையும் 'எல்.ஐ.சி. டெவலப்மெண்ட் ஆஃபிசர்' என்கிற தகுதி அடித்துக் கொண்டு போய்விட்டது. அவளுக்கு ஃபோட்டோவைக் காட்டி அறிமுகப்படுத்தியபோது கூட அதைத்தான் சொன்னார்கள். அவள் ஏமாற்றத்தோடு அந்தப் புகைப் படத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். கல்யாணம் பாதி முடிந்துவிட்ட மாதிரி அவளருகே பெருமையோடு அம்மாவும், அண்ணனும் நின்று கொண்டிருந்தார்கள். அண்ணன்கூட, 'அதுதான் கல்யாணத்துக் கப்புறம் பாத்துகிட்டே இருக்கப் போறியே இப்ப எங்களைக் கொஞ்சம் பாரும்மா' என்றான். அவன் சொன்னவிதம் அவள் திருமணத்திற்குச் சம்மதித்து விட்டதைப் போலத்தான் இருந்தது. முதலில் 'பிடிக்கவில்லை' என்று சொல்ல நினைத்தவள் எதுவும் சொல்லாமல் ஃபோட்டோவைத் திருப்பிக் கொடுத்துவிட்டு உள்ளே போனாள். அம்மா பின்னாலிருந்து,

''அவ சுபாவந்தான் உனக்குத் தெரியுமே. இதுக்கு ஏன் கவலைப்படற?'' என்று அண்ணனைச் சமாதானப்படுத்துவது அவளுக்கும் கேட்டது.

திருமணத்திற்குத் தனது செக்ஷனுக்கு மட்டுமே அழைப்பிதழ் கொடுத்தாள். விஷ்ணுவுக்குத் தருவது பற்றி இரண்டு நாட்கள் யோசனையில் இருந்துவிட்டு மூன்றாம் நாள் மனம் பொறுக்காமல் அவனை முதன் முறையாகத் தேடிச்சென்று பத்திரிகையை நீட்டினாள். விஷ்ணு வெளிப்படையாகவே மகிழ்ந்து போனான். பக்கத்தில் இருந்த நாற்காலியை இழுத்துக்



## மறக்க வேண்டியவை

❑ ''நீங்கள் முக்கியமாக இரண்டு செய்கைகளை மறந்து விட வேண்டும். ஒன்று, நீங்கள் பிறருக்குச் செய்த உதவி. மற்றொன்று, பிறர் உங்களுக்குச் செய்த தீங்கு.''

- ஸ்ரீ சத்யசாயி பாபா

அனுப்பியவர் : டி. கே. பானு

கொண்டு வந்து அவளை அமரச் சொன்னான். மாப்பிள்ளையைப் பற்றியும், அவனது குடும்பம், குணநலன்கள் பற்றியும் திருமண வேலைகளைக் குறித்தும் நிஜமான அக்கறையோடு விசாரித்தான். விஷ்ணு அவளது மதிப்பில் வெகுவாக உயர்ந்து போனான். ஆஃபிசிலிருந்து யாரும் வராத மாப்பிள்ளை அழைப்புக்குக் கூட விஷ்ணு தனியாக வந்திருந்தான்.

அவளது திருமணத்திற்குப் பிறகு விஷ்ணு முன்போலவே அவளைத் தேடி வந்து பேசிக் கொண்டிருந்தான். அவளை உரிமை எடுத்துக் கொண்டு கல்யாணத்தை ஒட்டி கலாட்டா செய்தான். 'ஒரு ஆணின் பிரச்னைகள் அவனைச் சார்ந்தவை; ஒரு பெண்ணின் பிரச்னைகளோ சமூகத்தையும் சார்ந்தவை: அத்தனை எளிதாக ஒரு பெண்ணின் பிரச்னைகளை வரையறுத்து விட முடியாது' என்று ஒரு தத்துவம் போல மீண்டும் அவளோடு பேச ஆரம்பித்ததற்கான காரணத்தைச் சொன்னான். அது போன்ற பிரச்னைகள் எதுவும் அவளுக்கு இல்லாமற் போனாலும் அவன் அப்படிச் சொன்னது அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது.

அவளுக்குக் குழந்தைகள் குறித்து நிறைய ஆசைகள் இருந்தன. வீடு முழுக்கக் குழந்தைகளாய்த் திரிகிற ஒரு கற்பனை உலகை அவள் சிருஷ்டித்து வைத்திருந்தாள். முதல் குழந்தை பிறந்ததும் வேலையை ராஜினாமா செய்துவிடவும் நினைத்திருந்தாள். குழந்தையின் சின்னச் சின்ன, மனத்தைக் கொள்ளை கொள்ளும் அசைவுகளில் சிலிர்த்து, தன்னுடைய பிரதியைத் தானே வடிவமைத்துக் கொள்கிற மாதிரி, தனது சிலையைத் தானே செதுக்கிக் கொள்கிற மாதிரி பார்த்துப் பார்த்து வளர்க்க வேண்டுமென்று தீவிர ஆசையோடிருந்தாள். திருமணம் பற்றிய அவளது எதிர்பார்ப்பு எதுவும் நிறைவேறாமற் போனாலும் அவள் தரப்போகிற குழந்தையைக் குறித்து மனம் நிறையப் பூரிப்பும் உற்சாகமும் இருந்தது.

ஆனால் திருமணமான முதல் வாரத்திலேயே அவன் அவளுக்கு மாத்திரைகள் வாங்கிவந்து கொடுத்தான். கனவுகளெல்லாம் உடைந்து சிதறின. மிகுந்த அதிர்ச்சியோடும் கண்ணீரோடும் அவள் அதை மறுத்தாள். தன்னிலை மறந்து கெஞ்சிப் பார்த்தாள். விவாதித்தால் அவனது பிடிவாதம், அதிகமாகுமென்று அந்த ஒரு வாரத்திற்குள் அவனைப் பற்றிப் புரிந்தே வைத்திருந்தாலும் தன் உணர்வுகளைப் புதைத்துக்கொள்ள முடியாமல் விவாதித்தாள். அப்பா இறந்த போதும் அழுதிராதவள் - அழுவது இழிவு - என்று எண்ணி



போலீஸ்காரர் : என்னைப் போலவே என் மகனும் காவல் துறைக்குத்தான் வருவான்னு எப்படி சார், சொல்றீங்க?

ஆசிரியர் : மாமல்லபுரம்னு எழுதச் சொன்னால், மாமூல்புரம்னு எழுதுறானே...!

- தி. ராஜு

யிருந்தவள் அன்று தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள முடியாமல் அழுதாள். அவன் அதைப் பற்றி எதுவும் கவலைப் படவில்லை. குழந்தை பிறப்பதைத் தள்ளிப் போடுவது அவள் தீர்மானிக்கக் கூடிய விஷயமில்லை என்பது போல நடந்து கொண்டான்.

அவளது கணவனும், அத்தையும் விழித்துக் கொண்டுவிட்டார்கள். காப்பியைச் சூடாக்கி அத்தைக்குக் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வந்தாள். அவள் இன்னமும் குளிக்காமல் இருந்ததை அவளது கணவன் ஆச்சர்யமாகப் பார்த்தான்.

''இன்னுமா குளிக்கலை? ஆஃபிஸ் போக வேணாம்?''

''இன்னிக்கு லீவு போட்டிருக்கேங்க.''

''வீட்ல இருந்துகிட்டு என்ன பண்ணப் போறே?''

''நீங்க லீவு போடலையாங்க?''

''எதுக்கு?''

''இன்னிக்கு நம்ம கல்யாண நாளுங்க.'' நெற்றியைச் சுருக்கி யோசித்துப் பார்த்துவிட்டு,

''ஆமாம். இல்லே?'' என்றான்.

''லீவு போடுங்களேன். கோயிலுக்குப் போய்ட்டு வருவோம்.''

''அதெல்லாம் சாயங்காலம் பாத்துக்கலாம். இன்னிக்கு ஆஃபிஸ் போயே ஆகணும். எனக்கு ஹீட்டர் போட்டு வச்சிருக்கியா?''

''இன்னிக்குப் பால் பாயசம் பண்ணட்டுமாங்க?''

''டயமிருந்தா பண்ணு. லீவெல்லாம்

அனாவசியமா வேஸ்ட் பண்ணாத. அப்புறம் குழந்தை பொறந்தா தேவைப்படும்.''

சொல்லிவிட்டுக் குளிக்கப் போனான். அவள் கடிகாரத்தைப் பார்த்தாள். இப்போது கிளம்பினால் ஆஃபிசுக்குப் போய் விடலாம். தான் தன் உணர்வுகளை மிகைப் படுத்திக் கொண்டு விட்டது போல ஒரு குற்ற உணர்வு தோன்றிற்று. பெரிதான ஒட்டுதல் எதுவுமில்லாமல் அப்படி ஒட்டுதல் இருப்பதாகத் தானே கற்பனை செய்து கொண்டு விட்ட மாதிரி தோன்றிற்று. அவனோடு கோயிலுக்குப் போனாலும் அவன் வாங்கித் தருகிற அவளுக்குப் பிடிக்காத மல்லிகையைத்தான் வைத்துக் கொள்ள வேண்டும். அவனோடு ஹோட்டலுக்குப் போனால் அவளது விருப்பம் பற்றி கவலையின்றி, அவன் ஆர்டர் செய்வதைத்தான் சாப்பிட வேண்டும். இவையெல்லாம் இந்த நாளுக்குப் பெரிய மாற்றம் எதுவும் ஏற்படுத்தித் தந்துவிடப் போவதில்லை. சாதாரணமாக நடந்து முடிந்து விடுகிற ஒரு நிகழ்ச்சிக்கு - நிகழ்ச்சி என்றுகூட சொல்லிவிட முடியாது - ஒரு நாளுக்கு ஏன் இத்தனை அலட்டிக் கொண்டோம் என்பதை நினைத்து ஆச்சர்யமாக இருந்தது.

திருமணநாளில் அவனுக்குப் பரிசளிப்பதற்காக வாங்கி வைத்திருந்த 'லஞ்ச் பேக்'கைக் கொடுப்பதா வேண்டாமா என்று குழம்பினாள். கடைசியில் பரிசளிப்பது போல் இல்லாமல் அவனாக எடுத்துக் கொள்வது போல இருக்கட்டுமென்று எண்ணி பீரோவில் மறைத்து வைத்திருந்த பையை எடுத்து டேபிள் மீது வைத்து விட்டுக் குளிக்கப் போனாள். அவள் குளித்துவிட்டு வரும்போது பையைக் காட்டி அவன் தயாராக அந்தக் கேள்வியைக் கேட்டான்.

''ஏது இது?''

''வாங்கினேங்க. உங்களுக்கு லஞ்ச் எடுத்துக்கிட்டு போக....''

''மாரேஜ் டே கிஃப்டா?''

அவன் சற்று இகழ்ச்சியாகக் கேட்டது போல இருந்தது.

''வாழ்க்கை முழுசும் சேர்ந்துதான் இருக்கப் போறோம். ஒவ்வொரு வருஷமும் இதுமாதிரி குடுத்துக்கிட்டிருக்கப் போறியா? நமக்கு நாமளே வாழ்த்து சொல்லிக்கறது, பரிசு குடுத்துக்கறது இதெல்லாம் அபத்தமா இல்லையா உனக்கு? பணம் வேற வேஸ்ட்டு...''

அவள் பெருமூச்சோடு உடை மாற்றச் சென்றாள். இன்று புதுப்புடைவை கட்டிக் கொள்ள வேண்டியிருக்குமென்று நேற்று கற்பனை செய்து வைத்திருந்ததை நினைத்துக் கொண்டாள். அவளுக்குப் பிடித்த சாம்பல் வண்ணப் புடைவையை பீரோவிலிருந்து எடுத்தவள் - சற்று தயக்கத்திற்குப் பிறகு அவன் ரொம்ப நாளாகக் கட்டப் பிடிக்காமல் வைத்திருந்த மஞ்சள் வண்ண ஷிஃபானைக் கட்டிக் கொண்டாள். உறை குத்தி வைத்திருந்த தயிரைத் தாளித்து இரண்டு டிஃபன் பாக்ஸ்களிலும் சாதத்தை நிறப்பி ஊற்றினாள். பால் பாயசம் செய்வதற்காக வைத்திருந்த பாலிலும் உறை குத்தி வைத்தாள்.

**ப**ஸ்ஸின் நெருக்கத்தில் கசங்கிப் போய்க் கொண்டிருந்த போது அவளுக்கு விஷ்ணுவின் ஞாபகம் வந்தது. இன்று அவளுடைய திருமணநாள் என்று அவனுக்குத் தெரியும். நேற்றே அது பற்றி லேசாகச் சொல்லி வைத்திருந்தாள்.

''இன்னிக்கு நைட்லேந்தே நான் சாப்பிடாம இருக்கப் போறேங்க.''

''ஏன்?''

''ஏன்னு உங்களுக்கே தெரியும். நாளைக்கு உங்க டிஃபனை ஒரு வெட்டு வெட்டப் போறேன்.''

''அப்படின்னா உங்களை ஆஸ்பத்திரிலதான் வந்து பாக்க வேண்டியிருக்கும்.''

''ஏன்? உங்க டிஃபன் அவ்ளோ மோசமாவா இருக்கும்?''

''அதில்லை. நாளைக்கு நான் லீவு. ஒருநாள் முழுசும் சாப்பிடாம இருந்தா உங்க உடம்பு என்னத்துக்கு ஆகும்?''

''சரி. நாளைக்கு இல்லாட்டி நாளைக்கு மறுநாள். வேலையை விட்டுட்டா போயிடப் போறீங்க?''

விஷ்ணு நிச்சயம் அவளைத் தேடி வருவான். அவளது டிஃபன் பாக்ஸை ஆவலோடு திறந்து பார்ப்பான். அவனிடம் பேசுவது போல பஸ்ஸுக்குள்ளேயே மானசீகமாக வருத்தத்தோடு சொல்லிக் கொண்டாள்.

''ஸ்பெஷல் ஐட்டம் எதுவும் பண்ணலை விஷ்ணு. கோயிலுக்குக் கூடப் போக முடியல. நேத்து நைட்டெல்லாம் அவருக்கு 'ஹை டெம்ப்ரேச்சர்.''



ஒருவர் : லஞ்சம் வாங்குங்க அதுக்காக இப்படி ஒப்பனா அதை ஊக்குவிக்கணுமா?

நண்பர் : என்ன சொல்றீங்க?

முதல் ஆசாமி : 'லஞ்சத்துக்கு ஏற்ற கவனிப்பு. இதுவே எங்கள் தனிச் சிறப்பு'னு போர்டு எழுதி மாட்டியிருக்கீங்களே அதைத்தான் சொல்றேன்!

- எஸ். முகம்மது ஆகப்

தலைவலிக்கு அடுத்தபடியாக மிக அதிகமான நபர்களைப் பிடிப்பது முதுகு வலிதான்! சராசரியாக, பத்து பேரில் எட்டு நபர்களுக்கு ஏதேனும் ஒரு காரணத்தால் முதுகு வலி இருக்கிறது.

பரிணாம வளர்ச்சிக்கு மனிதன் கொடுத்த விலையே முதுகு வலி எனலாம். தவழும் (நான்கு கால் பிராணி போல்) நிலையிலிருந்து இரு கால்களில் நின்று நடக்கும் நிலையை மனிதன் அடைந்ததன் காரணமாக, மண்டை ஓடு, தோள் எலும்புகள், மார்புக்கூடு எலும்புகள் ஆகிய மூன்றின் எடையையும் அவன் முதுகெலும்பே தாங்க ஆரம்பித்தது.

போதாததற்கு, மூளையை உடலின்




# "ஆ! முறுக்கி இழுக்குதே முதுகுவலி!"

இதர உறுப்புக்களுடன் இணைக்கும் நரம்பு மண்டலத்தின் பிரதான நரம்புக் கற்றையும் முதுகுத் தண்டு வழியேதான் செல்கிறது. இதனால் முதுகுப் பகுதியில் அடிபட்டாலோ, அப்பகுதி அதிகமாக வேலை வாங்கப்பட்டாலோ அதீதமான வலி உண்டாகிறது. இந்த வலி எளிதில் போகக் கூடியதும் அல்ல!

முதுகுவலிக்குப் பரிணாம வளர்ச்சி மீது பழி போட்டு விட்டு நாம் கைகழுவி விட முடியாது. ஏனெனில், சிறிது கவனமாக, எச்சரிக்கையாகச் செயல்பட்டால் முதுகு வலி அண்ட விடாமல் செய்யலாம்.

அதற்கான டிப்ஸ் சில :

● கீழ் முதுகுக்கு அழுத்தமான ஆதாரம் கொடுக்கும் நாற்காலிகளில் உட்காருங்கள். அத்தகைய நாற்காலி கிடைக்காவிட்டால் பாதகமில்லை. வயிற்றுப் பகுதி தசைகளை உள்ளிழுத்து, முதுகை நிமிர்த்தி, கால் மேல் கால் போட்டு அமருங்கள். தொடர்ந்து உட்கார வேண்டிய பணியெனில் அவ்வப்போது எழுந்து நடமாடுங்கள்.

● ஒரே இடத்தில் தொடர்ந்து நீண்ட நேரம் நிற்க வேண்டாம். அவ்வாறு நிற்க வேண்டிய கட்டாயமிருப்பின் உடல் எடையை அவ்வப்போது ஒரு காலிலிருந்து மறு காலுக்கு மாற்றுங்கள்.

● ஹை ஹீல் ஷூக்கள் அணிவதால் முதுகுத் தண்டு மோசமாகப் பாதிக்கப்படக் கூடும்.

● நீண்ட தூரத்துக்கு வண்டி ஓட்டிச் செல்பவர்கள் அவ்வப்போது இறங்கி, சில நிமிடங்கள் நடப்பது நல்லது.

● தொய்யாத அழுத்தமான மெத்தை





✱ தவறு ✱ சரி

யில் படுத்துறங்குங்கள். குப்புறப் படுப்பதைத் தவிர்த்து விடுங்கள்.

● கனமான பொருட்களைத் தூக்கும் போது அவற்றின் எடையை இரு தோள்களும் பகிர்ந்து தாங்கும்படி இரு கரங்களாலும் தூக்குங்கள்.

● சடாரென்று எந்தப் பொருளையும் தூக்கி விடாமல் ஒரே நபரால் அதைத் தூக்க முடியுமா என்று ஒரு கணம் யோசித்துச் செயல்படுங்கள்.

● தரையிலிருந்து கனமான பொருளைத் தூக்கும்போது, முதுகை வளைக்காமல் குந்தி உட்கார முற்படுவது போல் முழங்கால்களை மடித்துக் கொள்ளுங்கள். குனிந்து தூக்குவது தவறு. கால்களைச் சுமார் ஓர் அடி அளவுக்கு அகட்டி, தரையில் 'அழுந்த பதித்து வையுங்கள். முகவாயைத் துருத்தாமல் உள்ளடக்கிக் கழுத்தை ஒட்டியபடி வைத்துக் கொள்ளுங்கள். பிறகு, தூக்க வேண்டிய பொருளை உள்ளங்கையால் அழுந்தப் பிடித்து விரல்களால் சுற்றி வளையுங்கள். உடலை ஒட்டி கனத்தை இழுத்து, பின் தூக்குங்கள். பாதங்களுக்கு நேர் மேலாக வரும்படி பிடித்துக் கொள்ளுங்கள்.

● தூக்கிய பொருளைப் பக்கவாட்டிலோ பின் பக்கத்திலோ வைப்பதாயின் மேல் பகுதி உடலை மட்டும் திருப்பிச் செயல்படாதீர்கள். கால்களை நகர்த்தி, சரியான நிலைக்குக் கொண்டு வந்த பிறகே பளுவை இறக்க வேண்டும்.

● கனமான பொருட்களை இடுப்பளவு உயரத்துக்கு மேல் தூக்க வேண்டாம். சுலபமாகத் தூக்கக் கூடியதைக் காட்டிலும் அதிக எடை உள்ள பொருட்களைத் துணையின்றித் தனியே தூக்காதீர்கள்.

● உடலுழைப்பு கோரும் தினசரி வேலைகளுக்கிடையே குடும்பத் தலைவிகள் சில நிமிடங்கள் ஓய்வு எடுத்துக் கொள்வது நல்லது.

● திடீர் அசைவுகளையும் திடீரென்று அதிக பளு தூக்குவதையும் தவிர்க்கவும்.

– நன்றி ஃப்வைவஸர் நிறுவன வெளியீடு

# சிவகாமியின் சபதம்

## நாற்பத்தேழாம் அத்தியாயம்

## வீதி வலம்

ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன்னால் பரத கண்டத்தில் பிரசித்தி பெற்றிருந்த மூன்று சாம்ராஜ்யத் தலைநகரங்களில் வாதாபி ஒன்றாகும். கன்யாகுப்ஜத்தையும் காஞ்சியையும் போலவே வாதாபி நகரத்தின் புகழும் அந்த நாட்களில் கடல் கடந்து வெகுதூரம் சென்றிருந்தது.

ஒவ்வொரு தடவை திக்விஜயம் செய்து திரும்பும் போதும் புலிகேசியின் படை வீரர்கள் வெற்றி கொண்ட தேசங்களிலிருந்து ஏராளமான செல்வங்களைக் கொண்டு வந்து வாதாபியில் சேர்த்து வந்தார்கள். இதனால் வாதாபி நகரம் வளங்கொழிக்கும் நகரமாய் அந்தக் காலத்தில் விளங்கிற்று. அந்நகரில் வர்த்தகம் சிறந்தோங்கியிருந்தது. தூர தூர தேசங்களிலிருந்தெல்லாம் அந் நகருக்கு இரத்தின வியாபாரிகள் வந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

பிரசித்தி பெற்ற ஜைன ஆலயங்களும் பௌத்த மடங்களும் வாதாபியில் இருந்தபடியால், பற்பல நாடுகளிலிருந்தும் யாத்திரிகர்கள் அந்நகருக்கு வருவதுண்டு.

இதனாலெல்லாம் வாதாபி நகரம் எப்போதும் கலகலப்பாகவே இருந்து வந்தது. அதிலும் சக்கரவர்த்தி தலைநகரில் இருக்கும் போது கேட்க வேண்டியதில்லை.

சக்கரவர்த்தியைப் பேட்டி காண்பதற்காகச் சிற்றரசர்கள் காணிக்கைகளுடன் வருவார்கள். சீனம், பாரசீகம் முதலிய தூர தூர தேசங்களிலிருந்து அரசாங்கத் தூதர்கள் வருவார்கள்.

மாடமாளிகைகள், கூடகோபுரங்களுடன் விளங்கிய வாதாபியின் வீதிகள் எப்போதுமே திருவிழாக் காலத்தைப் போல் ஜனக்கூட்டம் நிறைந்து விளங்கும். வண்டிகள் - வாகனங்களின் சப்தம் ஓயாமல் கேட்ட வண்ணமிருக்கும்.

**வா**தாபி நகரில் வீதிக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டு சிவகாமி பல்லக்கிலே போய்க் கொண்டிருந்த போது அவளுடைய உள்ளம் அடிக்கடி காஞ்சியையும் வாதாபியையும் ஒப்பிட்டுக் கொண்டிருந்தது. பழமையான காலத்திலிருந்து செல்வமும் பண்பாடும் சேர்ந்து வளர்ந்து வந்த நகரத்துக்கும் திடீரென்று செல்வம் படைத்துச் செழிப்படைந்த புதுப் பட்டணத்துக்கும் உள்ள வித்தியாசங்கள் அவளுக்கு நன்கு புலனாகி வந்தன.

காஞ்சியில் செல்வத்திற் சிறந்த சீமான்களும் சீமாட்டிகளும் ஆடை ஆபரணங்கள் பூணுவதில் அடக்கம் காட்டுவார்கள். அவர்களுடைய அலங்காரங்களில் கலை உணர்ச்சியே பிரதானமாயிருக்கும்.

இந்த நகரிலோ எங்கே பார்த்தாலும் யாரைப் பார்த்தாலும் படாடோபமும் பகட்டும் தாண்டவமாடின.

காஞ்சி வீதிகளில் தெரிந்தவர்கள் சந்தித்தால் ஒருவருக்கொருவர் அன்புடனும் மரியாதையுடனும் முகமன் கூறிக் கொண்டார்கள். வாதாபியின் தெருக்களிலோ, தெரிந்தவர்கள் சந்திக்கும் போது இடி முழக்க ஒலியில் சிரித்து ஆர்ப்பரித்தார்கள்.

காஞ்சியில் எஜமானர்கள் வேலைக்காரர்களுக்குக் கட்டளையிடும் போது கூட அன்புடனும், ஆதரவுடனும் பேசினார்கள். வாதாபியில் எஜமானர்கள் வேலைக்காரர்

அமரர் கல்கி

களிடம் பேசும் போது கடுமையான மொழிகளையும் துர்வசனங்களையும் கையாண்டார்கள்.

இவற்றையெல்லாந் தவிரக் காஞ்சிக்கும் வாதாபிக்கும் உள்ள இன்னும் ஒரு வித்தியாசத்தையும் சிவகாமி கவனித்தாள்.

காஞ்சி வீதிகளில் புத்த பிக்ஷுக்கள், திகம்பர சமணர்கள், வைதிக சந்நியாசிகள், ஆண்டிகள், கபாலிகர்கள், வெறும் பிச்சைக்காரர்கள் ஆகியவர்கள் மொய்த்துக் கொண்டு வீதியில் போவோர் வருவோரின் பிராணனை வாங்குவது வழக்கம். தர்ம புத்தியுள்ள தனவான்கள் அதிகம் உள்ள இடத்திலே யாசகர் கூட்டமும் அதிகமாகப் பெருகி விடும் போலும்!

வாதாபியின் வீதிகளில் அம் மாதிரி பிக்ஷுக்களும் யாசகர்களும் அதிகம் காணப் படவில்லை. தர்மம் கொடுப்பவர்கள் இல்லாதபடியால் யாசகர்களும் இல்லை போலும்! - இம்மாதிரியெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டும், வாதாபியின் செல்வ வளத்தை வியந்து கொண்டும் சிவிகையில் சென்ற சிவகாமி, ஒரு நாற்சந்தி மூலையில் அதுவரையில் காணாத காட்சி ஒன்றைக் கண்டாள்.

ஸ்திரீகளும் புருஷர்களும் அடங்கிய ஒரு கூட்டம் அங்கே நின்றது. அவர்கள் ஒவ்வொருவருடைய கரங்களும் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன. அவ்விதம் பந்தமுற்ற கைகளுடன் தலைகுனிந்து நின்ற கும்பலைச் சுற்றி யமகிங்கரர்களைப் போன்ற முரடர்கள் சிலர் கையில் பெரிய பெரிய சாட்டைகளுடன் நின்றார்கள்.

இந்தக் காட்சியைப் பார்க்கும்போதே சிவகாமியின் உள்ளம் பதைத்தது. கைகள் கட்டுப்பட்டு நின்ற ஸ்திரீ புருஷர்கள் தமிழகத்தைச் சேர்ந்தவர்கள் என்று தோன்றியபடியால் அவளுடைய மனவேதனை பன்மடங்காயிற்று.

பல்லக்கை நிறுத்தி அவர்கள் அருகில் சென்று விசாரிக்கலாமா என்று சிவகாமி ஒருகணம் நினைத்தாள். ஆனால், அதற்கு வேண்டிய மனோதைரியம் அவளுக்கு ஏற்படவில்லை. சிவிகை மேலே சென்றது.

நாற்சந்தி முனையிலிருந்து சிவிகை கொஞ்ச தூரம் போன பிறகு சிவகாமி தடுக்க முடியாத ஆவலினால் திரும்பிப் பார்த்தாள். அந்தக் கூட்டத்திலிருந்தவர்களில் சிலர் கட்டப்பட்ட கைகளினால் தன்னுடைய சிவிகையைச் சுட்டிக்காட்டுவது போலவும், கண்ணீர் ததும்பிய கண்களால் தான் போகும் திசையை உற்றுப் பார்ப்பது போலவும் அவளுக்குத் தோன்றியது. உடனே சிவகாமி தன் பார்வையைத் திருப்பிக் கொண்டாள். பல்லக்குச் சுமந்தவர்களை நேரே வீட்டுக்குப் போகும்படி கட்டளையிட்டாள்.

**வீ**டு போய்ச் சேர்ந்ததும் சிவகாமி

● சிவகாமி அன்றிரவு ஒரு கணமும் கண்ணுறங்கவில்லை. சுளீர் சுளீர் என்று அவளுடைய உடம்பில் சாட்டையடி விழுவது போன்ற உணர்ச்சி அவளுக்கு அடிக்கடி உண்டாயிற்று. ●



தான் கண்ட காட்சியைத் தாதியிடம் சொல்லி, அதைப் பற்றி ஏதேனும் தெரியுமா என்று கேட்டாள். தாதி தனக்குத் தெரியாது என்று சொல்லவே, போய் விசாரித்துக் கொண்டு வரும்படி பணித்தாள்.

அவ்விதமே அந்தத் தாதி வெளியே போய் விசாரித்துக் கொண்டு வந்தாள். அவள் கூறிய விவரம் சிவகாமிக்குச் சொல்ல முடியாத பயங்கரத்தையும் மன வேதனையையும் அளித்தது.

தாதி விசாரித்து வந்து கூறிய விவரம் இதுதான்.

பல்லவ நாட்டிலிருந்து புலிகேசிச் சக்கரவர்த்தி அநேக ஸ்திரீ, புருஷர்களைச் சிறைப் பிடித்துக் கொண்டு வந்திருந்தார். அவர்களில் சிலர் சிறையிலிருந்து தப்பிப் போக முயன்றார்கள். சிலர் அடிமைத் தொண்டு செய்ய மறுத்தார்கள். சிலர் உணவு உட்கொள்ளாமல் பிடிவாதம் பிடித்தார்கள்; இத்தகைய குற்றங்களைச் செய்த கலகக்காரர்களை வாதாபி நகரின் நாற்சந்திகளில் நிறுத்திச் சாட்டையினால் அடிக்கும்படியாகப் புலிகேசிச் சக்கரவர்த்தி கட்டளையிட்டிருக்கிறார். இந்தச் சாட்டையடி உற்சவம் இன்றைக்குத்தான் ஆரம்பமாகியிருக்கிறது. இன்னும் இரண்டு மாதம் வரையில் நடக்கும். தினம் சாயங்கால வேளையில் வீதிகளில் நடக்கும் வாதாபி நகரவாசிகள் அந்த வேடிக்கையைப் பார்த்துக் களிப்பார்கள்.

**சி**வகாமி அன்றிரவு ஒரு கணமும் கண்ணுறங்கவில்லை. வேதனையும் துன்பமும் நிறைந்த அவளுடைய வாழ்க்கையில் இதுவரை என்றும் அனுபவித்தறியாத வேதனையை அவள் அனுபவித்தாள். சுளீர் சுளீர் என்று அவளுடைய உடம்பில் சாட்டையடி விழுவது போன்ற உணர்ச்சி அவளுக்கு அடிக்கடி உண்டாயிற்று.

பொன்முகலியாற்றங்கரையில் அவள் புலிகேசியை வேண்டித் தன்னுடன் சிறைப்பட்டிருந்த மாதர்களை விடுதலை செய்தது அவளுக்கு நினைவு வந்தது. அன்று விடுதலையானவர்கள் சளுக்கர் சைனியத்தினால் சிறைப் பிடிக்கப்பட்டவர்களில் ஒரு சிலர்தான் போலும். இன்னும் எத்தனையோ பேரை முன்னால் சென்ற பெருஞ் சைனியம் சிறைப் பிடித்துக் கொண்டு போயிருக்க வேண்டும்.

இன்று பகலில் சக்கரவர்த்தி வந்து தன்னுடன் பேசியதன் கருத்தும், தனக்கு வாதாபி நகரைச் சுற்றிப் பார்க்க அனுமதியளித்ததன் கருத்தும் இப்போது சிவகாமிக்குப் புதிய பொருளில் விளங்க ஆரம்பித்தன. சிவகாமியைத் தன்னுடைய காலிலே விழுந்து கெஞ்சும்படி செய்வதற்காக இம்மாதிரியெல்லாம் ஏற்பாடு செய்திருக்கிறான் அந்தக் கிராதகன். ஆனால், அவனுடைய எண்ணம் நிறைவேறப் போவதில்லை. யார் எப்படிப் போனாலும் சரி; இனித் தான் புலிகேசியின் காலில் விழுந்து கெஞ்சப் போவதில்லை. அவனுடைய சபையில் வந்து நடனமாடவும் ஒப்புக் கொள்ளப் போவதில்லை. ஒரு நாளும் முடியாது! இப்படியா வஞ்சம் தீர்க்க நினைத்திருக்கிறான், அந்தப் பாவி!

''எதற்காக வாதாபி நகரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினோம்?'' என்று எண்ணி எண்ணிச் சிவகாமி தவித்தாள். இரவெல்லாம் தூக்கமின்றித் துடித்துக் கொண்டிருந்தாள்.

**ம**றுநாள் பொழுது விடிந்தது; சூரியோதயம் ஆயிற்று. வானவெளியில் சூரியன் மேலே வர வர, சிவகாமியின் இதயத் துடிப்பு அதிகமாயிற்று. சூரியன் மேற்கு நோக்கிப் பிரயாணம் செய்யச் செய்ய அவளுடைய உள்ளமும் உடம்பும் பதறத் தொடங்கின.

இத்தனை நேரம் அந்தப் பல்லவ நாட்டு ஸ்திரீகளும் புருஷர்களும் நாற்சந்தியில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டிருப்பார்கள்! அவர்களுடைய கைகள் பின்னால் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும். இத்தனை நேரம் யமகிங்கரர்கள் போன்ற காவலர்கள் கையில் பெரிய சாட்டைகளுடன் வந்து நிற்பார்கள். இன்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் சாட்டையினால் அடிக்கத் தொடங்கி விடுவார்கள்.

சிவகாமி முதல் நாள் இரவு கொண்டிருந்த மனஉறுதியெல்லாம் பறந்து போயிற்று. பரபரப்புடன் பல்லக்குக் கொண்டு வரும்படி வாசற் காவலர்களிடம் கட்டளையிட்டாள். பல்லக்கு வந்ததும் அதில் விரைந்து ஏறிக் கொண்டு நேற்றுப் பார்த்த நாற்சந்தி முனைக்குப் போகும்படி சொன்னாள்.

**நா**ற்சந்தியின் சமீபத்தில் இன்று சிவகாமியின் சிவிகை போய்ச் சேர்ந்த போது, அங்கே கரங்கள் கட்டப்பட்டு நின்றவர்களிடம் நேற்றுக் காணாத கிளர்ச்சியை இன்று கண்டாள். அவர்கள் ஒருவருக்கொருவர் ஏதோ பேசிக் கொண்டார்கள். அவர்களில் பலர் சிவகாமியை நோக்கி, ''அம்மா! தாயே! எங்களைக் காப்பாற்று!'' என்று கூச்சலிட்டார்கள்.

எதிர்பாராத இந்த அபயக் கூக்குரலினால் சிவகாமியின் உள்ளம் பெருங் குழப்பமடைந்தது. 'ஐயோ! இவர்களைக் காப்பாற்றும் சக்தி உண்மையில் நம்மிடம் இருக்கலாகாதா?' என்ற ஏக்கம் ஒரு பக்கம் உண்டாயிற்று. பல்லக்கைத் தரையில் இறக்கச் சொல்லித் தானும் இறங்கிக் கூட்டத்தை அணுகினாள்.

மீண்டும், ''அம்மா! தாயே! எங்களைக் காப்பாற்று!'' என்ற கூக்குரல்கள் அக் கூட்டத்திலிருந்து எழுந்தன.

சிவகாமி அவர்கள் அருகில் இன்னும் நெருங்கிச் சென்றாள். அவர்களில் சில

ருடைய உடம்பில் முன்னமே சாட்டையடி பட்ட காயங்களைக் கண்டாள். அந்தக் காயங்களிலிருந்து இரத்தம் கசிந்து கொண்டிருப்பதையும் தரையில் பல இடங்களில் இரத்தம் சொட்டிக் கறையாகியிருப்பதையும் பார்த்தாள்.

சிவகாமியின் தலை சுற்றியது; வயிறு குமட்டியது; மயக்கம் வந்தது. அதையெல்லாம் சமாளித்துக் கொண்டு ஒருவாறு சித்தத் தெளிவை நிலைநாட்டிக் கொண்டாள்.

கூட்டத்தில் அவளுக்குச் சமீபத்தில் நின்ற ஸ்திரீயைப் பார்த்து, "அம்மா! உங்களைக் காப்பாற்றும்படி என்னை வேண்டிக் கொள்கிறீர்களே, அது ஏன்? உங்களைப் போல் நானும் ஓர் அபலைப் பெண்தானே! சளுக்கரால் சிறைப் பிடித்துக் கொண்டு வரப்பட்டவள்தானே? உங்களைக் காப்பாற்றும் சக்தி எனக்கு ஏது?" என்றாள்.

"எங்களைக் காப்பாற்றும் சக்தி உனக்கு உண்டு, தாயே! அதோ அந்த ராக்ஷதனைக் கேள்; அவன்தான் அவ்விதம் சொன்னான்" என்றாள் அந்த ஸ்திரீ.

அவள் சுட்டிக்காட்டிய ராக்ஷத வடிவங்கொண்ட வீரர் தலைவனைச் சிவகாமி அணுகினாள். வாதாபிவாசிகள் பேசிய கலப்புப் பாஷையில், "ஐயா! இவர்களை ஏன் இப்படிச் சாட்டையால் அடித்துச் சித்திரவதை செய்கிறீர்கள்? வேண்டாம்! இந்தப் படுபாதகச் செயலை நிறுத்துங்கள்!" என்றாள்.

அந்த வீரர் தலைவன் கலகலவென்று சிரித்தான். என்னவோ யோசிப்பவன் போல் சற்று இருந்து விட்டுப் பிறகு, "நாங்கள் என்ன செய்வோம், தாயே! சக்கரவர்த்தியின் ஆக்ஞை!" என்றான்.

"அப்படியானால் கொஞ்ச நேரம் பொறுத்திருங்கள். நான் உங்கள் சக்கரவர்த்தியிடம் சென்று வேண்டிக் கொண்டு பார்க்கிறேன். அதுவரையில்..." என்று சிவகாமி சொல்வதற்குள், அவ்வீரன், "வேண்டாம், அம்மா! சக்கரவர்த்தியிடம் நீ போகவே வேண்டாம். இவர்களைச் சாட்டையால் அடிப்பதை நிறுத்தும் அதிகாரம் உன்னிடமே இருக்கிறது. நீ சொன்னால் நிறுத்தி விடுகிறோம். ஆனால், அதற்கு ஒரு நிபந்தனை உண்டு!" என்றான்.

"அந்த வீரன் முதலில் கூறிய வார்த்தைகளை வியப்போடும் உவகையோடும் கேட்ட சிவகாமி, "நிபந்தனை" என்றதும் திடுக்கிட்டாள். இதில் ஏதோ வஞ்சம் இருக்க வேண்டும் என்ற எண்ணத்துடன், "என்ன நிபந்தனை?" என்றாள்.

"நீ இந்த இடத்தில், எங்கள் எல்லாருடைய முன்னிலையிலும் நடனம் ஆட வேண்டும். நீ ஆடும் வரையில் நாங்கள் இவர்களை அடிக்காமல் இருக்கிறோம். சூரியன் அஸ்தமிக்கும் வரையில் நீ ஆடிக்



"படத்துக்கு 'லட்டு, லட்டுதான்'னு பேர் வைச்சது தப்பா போச்சு."

"ஏன்?"

"தியேட்டர்ல 'ஈ' ஓட்டறாங்க."

– ராதா வாசுதேவன்

கொண்டிருந்தால், நாங்களும் பார்த்துக் கொண்டேயிருப்போம். சூரியன் அஸ்தமித்ததும் நீ வீட்டுக்குத் திரும்பலாம். நாங்கள் இவர்களைச் சிறையிலே கொண்டு போய்ச் சேர்ப்போம். நாளைக்கும் இவர்கள் அடிபடக் கூடாது என்று நீ கருதினால் நாளைக்கும் இம் மாதிரியே நீ இவ்விடம் வந்து நடனம் ஆடலாம்!" என்றான் அந்தக் கிராதகன்.

சிவகாமியின் உள்ளத்திலிருந்து எரிமலை, தீக்குழம்பையும் கரும்புகையையும் கக்கத் தொடங்கியது.

ஆஹா! இதுவா அந்தப் பாதகனுடைய எண்ணம்? இப்படியா என் மீது பழி வாங்கப் பார்க்கிறான்? இப்படியா என் அற்புதக் கலையை இழிவுபடுத்த நினைக்கிறான்? புத்த பிக்ஷு வேஷத்தில் வந்து என் கலையைக் கண்டு மெய்ம்மறந்து பரவசமடைந்ததாக நடித்ததெல்லாம் இதற்காகத்தானா?

ஆனால் அந்த வஞ்சக நெஞ்சனுடைய உத்தேசம் ஒருநாளும் நிறைவேறப் போவதில்லை. யார் எப்படிப் போனாலும், நான் வாதாபியின் நாற்சந்தியில் நின்று நடனம் ஆடப் போவதில்லை. ஒரு நாளுமில்லை.

முகத்தில் குரோதம் பொங்க, கண்களில் தீப்பொறி பறக்க நின்ற இடத்திலே ஸ்தம்பமாய் நின்று யோசித்துக் கொண்டிருந்த சிவகாமியைப் பார்த்து மேற்படி வீரர் தலைவன், "என்ன முடிவு சொல்கிறாய், தாயே! நடனம் ஆடப் போகிறாயா? அல்லது இவர்களைத் தங்கள் காரியத்தைப் பார்க்கச் சொல்லட்டுமா?" என்று கேட்டான்.

அந்தக் கேள்வி சிவகாமியின் செவிகளில் பழுக்கக் காய்ந்த வேல் நுழைவது போல் நுழைந்தது.

திடீரென்று பிரக்ஞை பெற்றவள் போல் அவள் துள்ளி நிமிர்ந்து நின்று அவ்வீரனைப் பார்த்தாள்.

"ஆஹா! இந்த நாற்சந்தியில் நின்று என்னை நடனம் ஆடவா சொல்கிறாய்? மாட்டேன் : ஒருநாளும் மாட்டேன்!" என்றாள்.

அவ்வீரர் தலைவன் முகத்திலே புன்னகையுடன், "சரி, உங்கள் வேலையை நீங்கள் நடத்துங்கள்!" என்று கையில் சாட்டையுடன் நின்றவர்களைப் பார்த்துக் கட்டளையிட்டான்.

(தொடரும்)

# ஆளில்லாத் தீவு

எங்கோ மத்தியான வேளையின் மலையாளப் பட ஒலி மட்டும் கேட்டது. வேறெதுவுமில்லை. நிசப்தம். கிட்டத்தட்ட மயானம். மொத்தம் நான்கோ, ஐந்தோ - மாதத்தின் மயான நாட்கள். காலை எழுந்தவுடன் அந்த வார அழுக்குகளைக் கிணற்று நீரில் அலசிப் போட்டு விட்டு உப்புமில்லாமல், உறைப்புமில்லாமல் ஏதோ ஒன்றை வைத்துத் தின்று விட்டு, விட்டத்தை வெறித்துக் கொண்டு வெறுந் தரையில்...

முருகேசனுக்குச் சினிமாவுக்குப் போகலாம் போல இருந்தது. ஒருபுறம் கவலை. இதோ இந்த வார ஓய்வு இன்னும் பத்து மணி நேரத்தில் காலாவதி. அதையும் இருட்டில் கண் வலிக்க உட்கார்ந்து வீணாக்க வேண்டுமா? வேண்டாம்!

சட்டையை மாட்டிக் கொண்டு இலக்கில்லாமல் நடந்தான். இலேசாய்ப் பசித்தது. சாப்பிட்டதென்னவோ சற்று முன்தான். எப்போதும் பசித்துக் கொண்டேயிருப்பது போல் ஒரு உணர்வு. எல்லாம் இங்கு வந்த பின்தான்.

பசி எல்லாவற்றுக்கும்தான்; அன்புக்கு, தோழமைக்கு, பாசத்துக்கு. நடுத்தரவர்க்க இளைஞர்களின் கதி. எங்கோ சொந்தம். தூரத்தில். அவ்வப்போது கனவு மாதிரி பார்த்துக் கொள்ளலாம். 'இன்னும் சாப்பிடேன்டா' என்று பக்கத்தில் உட்கார்ந்து தலையை வருடும் அம்மா. 'அப்பாடா! வருஷம் ஒரு தடவையாவது வர்றியே' என்று குதூகலிக்கும் தங்கை. ஒரே தங்கை. சரியாய்ப் பதினோரு மாதம் முன்பு பார்த்தது. இப்போது இன்னும் வளர்ந்திருப்பாள். கனிவுடன் பார்க்கும் அப்பா.

கண்காட்சி மாதிரி வருஷம் ஒருமுறை போய்ப் பார்த்து உறுதிசெய்து கொள்ளலாம். இதுதான் அப்பா. இதுதான் அம்மா. இதுதான் வளர்ந்த வீடு. நடந்த தெரு. படித்த பள்ளிக்கூடம்.

எல்லாமே இயந்திரங்கள் சம்பாதிக்கும் இயந்திரங்கள். காலை எட்டுக்கு எழுந்து ஓடி ஓடி உழைத்து, 'சாப்டியா தூங்கினியா' என்ற ஃபார்மாலிடி விசாரிப்பு கூட இல்லாமல் ஒண்ணாம் தேதியைக் குறிவைத்து ஓடும் இயந்திரங்கள். முருகேசன் இந்தத் தொழிற்பேட்டைக்கு வந்து மூன்று வருடங்கள் ஆகிவிட்டன. முடிந்தவரை உழைப்பை உறிஞ்சிக் கொண்டு கொஞ்சமாக எண்ணிக் கொடுக்கும் தனியார் கம்பெனி. சில சமயம் பயங்கரமாக வெறுப்பு வந்தது. எல்லாவற்றையும் உதறிவிட்டு ஊருக்கு மூட்டை கட்டி விடலாமா எனத் தோன்ற வைக்கும் மாதக் கடைசிகள்.

மொசைக் போட்ட வீட்டில் டி.வி.யும், நைட்டி போட்டுக் கொண்டு சமைக்கும் மனைவியும், நுனி நாக்கில் கான்வெண்ட் வைத்துக் கொண்டு அதிகப்பிரசங்கிக் கேள்விகள் கேட்கும் குழந்தைகளும்... சீ! வெறும் கனவு. வெறும் பிம்பம்.

**வி**ழித்த போது மணி எட்டாகி விட்டிருந்தது. நாளை முதல் தேதி. ஐந்து நாட்கள் விடுமுறை கேட்க வேண்டும். தள்ளித் தள்ளிப் போட்டுக் கொண்டேயிருக்கிறான். சம்பளம் வாங்கியவுடன் ஊருக்குப் போய் வந்து விட வேண்டும். பிறகு தலைகீழாக நின்றாலும் முடியாது. இன்று எப்படியாவது கேட்டு விட வேண்டும். மானேஜர் நல்ல மூடில் இருக்கும் போது கேட்க வேண்டும். ஜாக்கிரதையாக சர்வ ஜாக்கிரதையாக.

படியிறங்கிய போது எதிர்வீட்டுக் குழந்தை தோளில் பை என்கிற மூட்டையுடன், கையில் டிஃபன் பாக்ஸுடன் இளம் பிஞ்சு. இளம்பும்போதே முகத்தில் வியர்வை. முதுகில் சுமை. முருகேசனுக்குப் பரிதாபமாய் இருந்தது. தொடர்பில்லாமல் ஊரில் உள்ள தங்கையின் முகம், நினைவில் வந்தது.

''பாப்பா!'' கூப்பிட்டான்.

''ம்...'' மூச்சிறைப்பு அந்த 'ம்'மிலேயே தெரிந்தது.

''யுவர் நேம்?''

''அனி... அனிதா...''

''இவ்வளவு புக்ஸும் படிக்கிறியா?''

பேச்சுவாக்கில் இணைந்து நடந்தான்.

''தேவையான புத்தகம், நோட்டு மட்டும் எடுத்துட்டுப் போனா போதாதா?''

சினேகமாய்ச் சிரிக்க, அந்தக் குழந்தையும் சகஜமாய்ப் பேச ஆரம்பித்தது.

''மிஸ் திட்டுவாங்களே! ஸ்கூல் மிஸ் திட்டாம விட்டாலும் ட்யூஷன் மிஸ் அடிப்பாங்க... ட்யூஷனுக்கும் சேர்த்து எடுத்துட்டுப் போறதாலதான் இவ்ளோவ்...'' என்று உதடுகளைச் சுழித்தது.

''நான் வேணா எடுத்திட்டு வரட்டா...?''

''அய்ய! நீங்கள்லாம் பெரிய ஆளு! ஸ்கூல் புக்செல்லாம் தூக்கிட்டுப் போனா சிரிப்பாங்க...''

''பரவாயில்லே... உங்க ஸ்கூல் நான் போற வழியிலதான் இருக்கு... இங்கே குடு அந்தப் பையை...'' என்று வலுக்கட்டாய

**திருவையாறு பாலுசாமி**



மாக வாங்கிக் கொண்டான்.

குழந்தை அதிசயமாய்ப் பார்த்தது. சுமை இறங்கிய திருப்தியில் உல்லாசமாய் நடை போட்டது.

முருகேசனுக்குத் திருப்தியாக இருந்தது. அதன்பின் ஸ்கூல் வரும் வரை 'வளவள' வெனப் பேசினாள். 'ட்யூஷன் மிஸ்'ஸின் அராஜகம், அவள் தம்பியின் குறும்பு, ரஜினி காந்தின் சண்டை எனப் பல விஷயங்கள். பெரிய மேதாவி போல அவள் பேசியது முருகேசனுக்குப் பிடித்திருந்தது. அவளுக்குச் சமமாகப் பேச ஆரம்பித்தான். ஸ்கூல் வந்த வுடன் கிட்டத்தட்ட 'செகண்ட் பி' கிளாஸ் பையன் லெவலுக்கு இறங்கி விட்டான்.

''நாளைக்கும் வர்றீங்களா அங்கிள்?''

'அங்கிள்!' - முருகேசனுக்கு உள்ளுக்குள் ஏதோ ஜ்வாலை பொங்கியது. இந்த ஊரில் சொந்தம் கொண்டாடும் ஒரு பிறவி. முதன் முறையாக. காது, மனசெல்லாம் இனித்தது.

''நிச்சயமா!''

**ம**தியம் சாப்பிட்டு விட்டு மானேஜர் ரூமில் எட்டிப் பார்த்தான். யூனியன் லீடர் பரமசிவமும், அவன் சகாக்களும் காரசாரமாக ஏதோ வாதிட்டுக் கொண்டிருந்தனர். இப் பொழுது போனால் அவ்வளவுதான். எல் லாம் 'கொலாப்ஸ்': பேசாமல் திரும்பி வந்து வேலையைத் தொடர்ந்தான்.

சம்பளப் பணம் பாக்கெட்டில் கனத்தது. எப்படியாவது லீவ் கிடைத்து ஊருக்குப் போய் விட வேண்டும். எல்லா தெய்வங் களும் அவன் வாயில் உருண்டன.

ஒரு மணி நேரத்தில் ஆஃபீஸ் பாய்.

''மானேஜர் கூப்பிடறாரு!''

'என்னவாக இருக்கும்....' கையில் லீவ் அப்ளிகேஷனை எடுத்துக் கொண்டான். முகத் தில் பரிதாபத்தை வரவழைத்துக் கொண் டான்.

முகத்துக்கு நேராய்க் காகிதங்கள் விசிறி யடிக்கப்பட்டன.

''என்னய்யா டைப் பண்ணியிருக்க நீ? ஹாங்... பக்கத்துக்கு நாலு மிஸ்டேக்!''

முருகேசனுக்கு ஒன்று தீர்மானமாய் விட்டது. இன்று லீவ் கேட்கக் கூடாது. முடி யாது. கிடைக்காது. நிச்சயமாய்.

''வேலையில கவனம் இருந்தா எப்படி வரும் மிஸ்டேக்... அப்படியே பராக்கு பாத் திருப்ப... போ... போ... திருப்பி அடிச்சுக் கொண்டா...''

கையில் வைத்திருந்த லீவ் அப்ளி கேஷனை அப்படியே கசக்கி வைத்துக் கொண்டான். வரும் போது அவன் முகம் நிஜமாகவே பரிதாபமாக இருந்தது.

நாலரை மணிக்கு மீண்டும் ஒருமுறை போய்ப் பார்க்கலாம் என்று சபலம். 'ஒரு வேளை நல்ல 'மூடு'க்குத் திரும்பியிருக்க லாம்...!

போய்ப் பார்க்க,

''அவர் அப்பவே போய்ட்டாரே...''

**இ**ரவு தூங்கப் போகும் போது அனிதா வின் ஞாபகம் வந்தது. நாளை அவள் பையை மீண்டும் சுமக்க வேண்டும்.... சுகமான சுமை...

மறுநாள் கிளம்பும் போது மீண்டும் உறுதி செய்து கொண்டான். 'இன்று எப்படி யாவது...' ஏதோ ஒரு தைரியத்தில் உடை யெல்லாம் எடுத்து சூட்கேஸில் அடுக்கி யிருந்தான். 'சாயந்திரம் வந்தால் நேரம் இடைக்குமோ என்னவோ...'. செருப்பை மாட்டும்போதே அனிதா படியிறங்குவது தெரிந்தது. உற்சாகமாய்க் கையாட்டினான். அவனைப் பார்த்த பிறகும் தன்போக்கில் மௌனமாய் நடக்கும் அனிதாவைப் பார்க்க ஆச்சரியமாக இருந்தது. 'என்ன ஆயிற்று? அந்த உற்சாகத் துள்ளல் எங்கே போயிற்று?'

❑ இங்கிலாந்தில் விக்டோரியா ராணி ஆண்ட போது, அரண்மனை எலி பிடிப்பவனுடைய சம்பளம், அரசவைக் கவிஞருடைய சம்பளத்தை விட அதிகம்!

- ஆறுபாதி புகழேந்தி

ஆதாரம் : 'உலக நாடுகளின் சரித்திரச் சான்றுகள்'





❑ கார் அல்லது வேன் விபத்து நேர்ந்தால் டிரைவரின் நெஞ்சுப் பகுதியும் தலையும் ஸ்டியரிங்கில் இடிபடாமல் பாதுகாப்பது எப்படி? அதற்காக இப்போது ஏர் பேக் பொருத்தப்படுகிறது. விபத்து நேர்ந்தால் அடுத்த வினாடியே அது ஸ்டியரிங் மேல் ஒரு காற்று உப்பிய பையாக மாறி, முகம் மோது வதிலிருந்து காக்கிறது.

ஆதாரம் : பாப்புலர் சயின்ஸ்
தகவல் : கே.வி.எஸ். சுந்தரம்

வேகமாய் நடந்து பிடித்து நிறுத்தினான்.

''அனிதா என்னாச்சு உனக்கு? பேசாம போறியே?''

''எங்கூட பேசாதீங்க அங்கிள்...''

ஒரு நிமிடம் துவண்டு போனான் முருகேசன்.

''ஏம்மா?''

''மம்மி உங்களோட போறதைப் பாத்தாங்களாம். ஒரே திட்டு நேத்திக்கி...''

அனிதா தன்பாட்டுக்கு நடந்து கொண்டிருந்தாள். முருகேசன் நின்று விட்டான்.

முருகேசனுக்குத் தனித் தீவில் ஒற்றை ஆளாய் நடப்பது போலிருந்தது. எப்படி இது? சொந்தம், சுற்றத்தையெல்லாம் எங்கோ விட்டு விட்டு சாப்பாட்டுக்கும், சம்பாத்தியத்துக்கும் நாயாய் அலைந்து தன்னை நிலை நிறுத்திக் கொள்ளத் துடிக்கும் இளைஞர்கள்... எல்லாமே தீவிரவாதிகளா? கெட்டவர்களா? பாசம், அன்பு போன்ற செண்டிமெண்டுக்கெல்லாம் இடம் கொடுக்கக் கூடாத கொரில்லாப் படையா? முருகேசனுக்குப் புரியவில்லை. தான் அதிகமாக எதிர்பார்க்கிறோமோ என்று தோன்றியது.

மனசு கனத்தது.

**மா**னேஜரிடம் லீவ் கேட்க நாலைந்து முறை அலைந்து கடைசியில்...

''போன மாசம்தானே ஒரு நாள் லீவ் எடுத்தே?'' என்றார்.

முருகேசன் பேசவில்லை. எது பேசினாலும் அது தன் மீதே திருப்பி விடப்படும் என்று அவனுக்கு அனுபவத்தில் தெரியும்.

''தஞ்சாவூர்தானே நீ?''

''ஆமாம் சார்! தஞ்சாவூர் பக்கம்... திருவையாறுன்னு...''

''அதெல்லாம் சரி! எவ்வளவு நேரம் ஆகும் போக...''

''எட்டு மணி நேரம்...''

''சரி! உனக்கு லீவு தரேன்... ஆனா அந்த நாளில்லே... இன்னிக்கி சாயந்திரம் கிளம்பு... நாளைக்குக்காலையில ஊருக்குப்போயிடுவ இல்லையா... நாளைக்கு ஃபுல்லா வீட்ல இரு.. நைட் கிளம்பி காலையில வந்துரு... ஒரு நாள் லீவு போதுமில்ல... ஏன்னா 'டெஸ்பாட்சஸ்' இருக்கு... நீ இல்லாம முடியாது...''

வெறுப்பின் விளிம்பில் முருகேசனுக்கு இலேசாகக் கண்ணில் நீர் துளித்தது. பேசக் கூட தெம்பில்லை.

இவன் முகத்தில் என்ன படித்தாரோ என்ன தோன்றியதோ...

''இல்லைன்னா ஒண்ணு செய்யலாம்... தங்கையனைக் கூப்பிடு. அவர் மேனேஜ் பண்ணிப்பாரா கேளு... 'ஓகே'ன்னா நாலு நாளா எடுத்துக்க'' என்றார்.

தங்கையனைக் கேட்க,

''நோ ப்ராப்ளம்!'' என்றார்.

தங்கையனுக்குக் கோவில் கட்டிக் கும்பிடலாம் போல இருந்தது அவனுக்கு.

நாலு மணிக்கே மனசு இறக்கை கட்டிக் கொண்டது. சந்தோஷத்தில் கண்கள் விரியும் தங்கையும், அம்மாவும், அப்பாவும் கண் முன்னே... தங்கைக்கு ஒரு செட் டிரஸ்ஸும், அம்மாவுக்குப் புடைவையும் எடுத்துக் கொள்ள வேண்டும். பணம் போதுமா? தெரியவில்லை. சமாளித்துக் கொள்ளலாம். வந்தபின் காலை, இரவுச் சாப்பாட்டைக் கொஞ்சம் 'அட்ஜஸ்ட்' செய்து கொண்டால் போயிற்று.

**ரூ**ம் கதவு இறக்க, விசிறியடிக்கப்பட்ட கடிதம் மூலையில். தங்கையின் குண்டு குண்டான கையெழுத்தில்.

'...தெற்குத் தெரு ஆறுமுகத்திடம் அப்பா போன வருடம் கடன் வாங்கிய ஆயிரம் ரூபாயை அவர் கேட்டிருக்கிறார். நடுச் சாலையில் நாகரீகமில்லாமல் அவர் திட்ட அப்பாவுக்குக் கோபம் வந்து தகராறாகி விட்டது. ஒரு வாரத்தில் திருப்பித் தருவதாக அப்பா சொல்லி விட்டார். ஐந்நூறு ரூபாய் புரட்டி விட்டார். மீதி ஐந்நூறு நீ அனுப்பி வைத்தால் உதவியாக இருக்கும்...

பி. கு. : 'நீ ஊருக்கு வர வேண்டும்' என்று அலைந்து உடம்பைக் கெடுத்துக் கொள்ள வேண்டாமென்று அம்மா எழுதச் சொன்னார்கள்....'

சூட்கேஸைப் பிரித்துத் துணிகளைக் கொடியில் போடத் துவங்கினான்.

---

❑ ஒரு புதிய கண்டுபிடிப்பு மார்க்கெட்டுக்கு வரவிருக்கிறது. வழியில் எவரேனும் தாக்கித் திருடவோ, பலாத்காரம் செய்யவோ முயற்சி செய்தால், கைவசம் உள்ள ஒரு கார்டை மடக்கினால் போதும். எதிராளியை நோக்கி மடக்கப்படும்போது அதனுள் ஒரு காப்ஸ்யூலிலிருந்து துர் நாற்றம் மிக்க திரவம் அவன் மேல் பீய்ச்சி அடிக்கும். துர்நாற்றம் இரு வாரங்கள் முதல் ஒரு மாதம் வரை அந்த நபரின் மேல் வீசிக் கொண்டே இருக்கும். ஆள் அடையாளம் காணப்படுவான்.!

ஆதாரம் : பிளிஸ் இந்தியா
தகவல் : வசந்தா சாரி



**10**

**பி**ரகாஷ் குழம்பியிருந்தான்; சினந்திருந்தான்; சோர்ந்திருந்தான்; துக்கத்திலிருந்தான்; வெறுத்திருந்தான். காத்திருந்து கண்கள் பூத்துப் போயின. சிந்துஜா செல்லம் வரவில்லை.

இடையில் ஒருமுறை தேவதேவன் வந்து விசாரித்து விட்டுச் சென்றார்.

இப்போது என்ன செய்வது? ஏன் அனுப்பவில்லை? இடையில் ஏதும் சிக்கலா? இந்தப் பரந்த உலகில் எங்கே என்று என் கண்மணியைத் தேடுவேன்?

சிந்துவைச் சந்தித்தது, பழகியது, காதலித்தது, ஸ்பரிசித்தது எல்லாம் நினைவில் வரிசையாக வந்து வாட்ட, தன் அறைக்கும் ரிசப்ஷனுக்குமாகக் காலையிலிருந்து அலைந்தவாறிருந்தான்.

துல்லியமாக மாலை ஆறுக்கு அடுத்த அறை போனில் ரிசப்ஷனின் சிவப்பு போனுக்கு வருமாறு ஒற்றை வரி ஒலித்தது; ஓடினான்.

''உன் பணம் கிடைச்சது துரை. ரொம்ப நன்றி.''

''நன்றி இருக்கட்டும். என் சிந்து எங்கேடா?''

''பத்திரமா இருக்கா துரை!''

''ராஸ்கல்!'' என்றான் ஆத்திரம் பொங்க. ''பணம் வெச்சதும் அனுப்பறேன்னு சொன்னியே...''

''இப்பவும் அதையேதான் சொல்றேன்!''

''வாட் டூ யூ மீன்?'' என்றான் புருவம் சுருங்க.

''இன்னொரு பத்து லட்சம் வெட்டிரு துரை. 'உன்' சிந்துவை அனுப்பி வைக்கிறேன்.''

சிந்து சிக்கியுள்ள சதிச் சூழல் மனத்தைத் தாக்க, சட்டென்று அவனிடம் ஒரு தீர்மானம் தெரிந்தது; ஒருவித அச்சுறுத்தும் அசாதாரண அமைதி அவனிடம் நிலவியது. புயலுக்கு முன் வரும் அமைதி போல...

''யோசிக்காதே பிரகாஷ்... உனக்கு வேறு சாய்ஸ் இல்லை. பாரு உன் துரதிர்ஷ்டம் எனக்குப் பெருத்த பணமுடை. இந்த தபா பணத்தைக் குடுத்துரு; சிந்துஜாவை விடுவிச்சுடறேன்.''

''ஓ.கே.'' என்றான் மெல்லிய குரலில். அவனுடைய வழியில் செல்வது போல் சென்று... ''இப்ப மட்டும் விடுவிச்சுருவேன்னு என்ன கியாரண்டி?''

எதிர் முனையில் அவன் சிரித்து விட்டு, ''என் வார்த்தையை நீ நம்பித்தான் ஆகணும் துரை. என் மெர்சில நீ இருக்கே, புரியுதா? நான் சொல்றபடி கேட்டாத்தான் உன் சம்சாரத்தைத் திரும்ப நீ பார்க்க முடியும்!'' என்றான்.

''**இ**ந்த முறை பணம் எப்போ, எங்கே வைக்கணும்?''

''நாளை சொல்றேன் துரை. ஆங்! அப்புறம் இந்த விஷயத்தைப் போலீஸ்கிட்டே சொல்லிராதே. சொன்னேன்னு வச்சுக்க...'' (மௌனம்) ''உன் சிந்துவை உடனடியாகக் கொல்ல மாட்டேன். முதல் தவணையா அவளோட விரலை வெட்டி உனக்குப் பார்சல் அனுப்புவேன்! அப்புறம் தினம் ஒவ்வொரு அங்கமா-''

''போலீஸுக்குப் போக மாட்டேன்!'' என்றான். பற்களைக் கடித்தவாறு அறைக்குத் திரும்பினான்.

**தே**வதேவன் சொன்னது சரிதான்.

தன் சொத்து முழுவதையுமே கொடுத்தாலும் சிந்துஜாவைச் சதிகாரடான் திருப்பி அனுப்ப மாட்டான் என்று பிரகாஷுக்குத் தோன்றி விட்டது. ஆனால் இப்போதும் இந்த விஷயத்தை ஏசிபியிடம் சொல்வதில்லை என்று முடிவு செய்து கொண்டான். போலீஸுக்குத் தெரிந்தால், உத்தரவாதமாக உடனடியாக சிந்துவைத் தீர்த்து விடுவான் டான்... மேலும், போலீஸ் வழிகள் ஒரு வரைமுறைக்கு உட்பட்டவை. ஆனால் நான்...

மேசை மேலிருந்த போட்டோவில், உயிர்த் துடிப்புடன் சிரிக்கும் சிந்துஜாவைப் பார்த்தான். 'இனி உன்னை உயிருடன் பார்க்கவே முடியாதா டியர்?' துக்கத்தில்



அமிழ்ந்தது ஒரு கணம்தான். 'நோ!' - எரிமலையாக எண்ணங்கள் எழுந்தன.

அவனுடைய தாத்தா பிரிட்டிஷ் இன்ஸ்பெக்டர் துரையின் கை வெட்டியவர் என்று கேள்விப்பட்டிருக்கிறான். அ வ ரு டை ய பரம்பரை நான். என் மனைவியை ஒருவன் கடத்துகிறான்... சவால் விடுகிறான்... என் கோபத்தின் சக்தி அறியாது என்னைச் சாமானியன் என நினைத்து விட்டான் போல... தூங்கும் புலியை இடறி விட்டு விட்டான் டான்...

பிரகாஷ் 'யார்' என்பதைக் கலிலியோவுக்குக் காட்டப் போகிறேன்... அசகாய நடிப்பிற்கு, சாதுர்யத்திற்கு, வீரத்திற்கு வேளை வந்து விட்டது. என் சிந்துவை மீட்பது உறுதி. உலகின் எந்த மூலையிலிருந்தாலும் அந்த டானைத் தேடி...

அவனுள் ஏதோ ஒரு ஆதிகால ஜீன் விழித்துக் கொள்ள, கட்டுக் கடங்காத ஆத்திர ஜுவாலையொன்று கிளம்பியது. உணர்ச்சிவசப்பட்டிருந்ததில் அவனுக்கு மூச்சிரைத்தது; கண்களில் ஆபத்து சுடர் விட்டது. யார் அவன்?

ஒரு பெல் பாய் அழைத்துப் பழைய தினசரிகள் தருவித்துக் கொண்டான். டான் பற்றிய செய்திகளைக் கவனமாக அலசினான். சோமையா என்ற பெயர் தாங்கிய டான் கலிலியோ புகைப்படத்தை இமைக்காமல் பார்த்தான். இவன்தான் என் எதிரி. சகலருக்கும் மண் தூவி ஏமாற்றிய டானுக்கு என் கையால்தான் முடிவு போல... குரூரமாகச் சிரித்துக் கொண்டான். 'வருகிறேன் டான் சோமையா...'

திட்டமிட்டான். தான் பணம் வைத்து விட்டு மறைந்து கொள்ள கொடைக்கானலின் மரங்களும், குத்துச் செடிகளும், இருளும் துணை செய்யும். ஆனால் பெட்டி எடுத்துப் போக சத்தியமாகச் சோமையா வர மாட்டான். வேறு யாரேனும் உதவியாளனாக இருக்கலாம். இருக்கட்டும். வருபவனைப் பின்பற்றி...

ஆனால் மறுநாள் - வெள்ளி - காலை வந்த போன், பிரகாஷின் திட்டத்தைத் தகர்த்து விட்டு அவனைக் குழப்பியது.

''என்ன துரை பணம் ரெடி பண்ணிட்டியா?''

''தயார்தான்'' என்றான் உணர்ச்சியில்லாத குரலில். ''புதன் இரவு வெச்ச அதே இடந்தானே?''

''இல்லை துரை! இங்கே இனி பாதுகாப்பு இல்லை. போலீஸ் விழிச்சுக்கிட்டிருக்கு. நாங்க இடத்தை மாத்திட்டோம். எங்கே பணம் வைக்கணும்னு போன்ல முடிவா சொல்றதுக்கில்லை. தவணை முறைல தகவல் வரும் துரை. நாளை நைட் கிளம்பு.''

''எங்கே?''

''மதுரை! உன்னை யாராச்சும் ஃபாலோ செய்யறாங்களான்னு முதல்ல உறுதி செய்துக்கணும் துரை!''

எதிராளியின் எச்சரிக்கையில் வியந்தான்.

''மதுரைல அறை எடுத்துத் தங்கு பிரகாஷ். சமயம் பார்த்து என் ஆள் உன்னைத் தொடர்பு கொள்வான். 'கழுகைக் காணோம்'னு எங்க ஆளு சொன்னதும் நீ 'விலகுது விபரீதம்'னு சொல்லணும். சங்கேத வார்த்தை! புரியுதா துரை?''

''ஊம். ஊம். போன் வச்சிடறேன்'' என்றான் அவசரமாக.

''என்னா துரை பதற்றம்?''

''டிஎஸ்பி சாமுவேல் என்னைப் பார்த்து வந்துக்கிட்டிருக்கார்!''

''நல்லது! அந்தப் பயம் இருக்கட்டும்!''



**போ**ன் வைத்து விட்டு நிதானமாகத் திரும்பினான். ''ஹலோ சார்'' என்று இயல்பாகப் புன்னகைத்தான்.

''என்ன காலங் காலையில போன்?''

**பத்மா ரவிசங்கர்**

''அப்பா!'' என்றான் பதற்றப்படாமல், ''எங்கே ஏசிபி?''

''அடடா! உங்களுக்கு விஷயம் தெரியாதா? நேத்து நைட் தேவதேவனுக்குத் திடீர்னு ஹார்ட் அட்டாக் ஆகி குட் ஹெல்த் நர்சிங் ஹோம்ல அட்மிட் செய்திருக்கோம்.''

''மை காட்!'' என்றான். ஒரு திறமைசாலியான, நல்ல மனிதருக்கு இவ்வாறு நேர்ந்ததில் வருத்தமும், முக்கியமான தடை திடீரென்று நீங்கியதில் மகிழ்ச்சியும் ஒருசேர உணர்ந்தான். ஏசிபியைக் கொடைக்கானல் குளிர் பாதித்துவிட்டதோ...

''இளைஞரு. திடகாத்திரரு. இருந்தும் பாருங்க. அட்டாக்கு'' என்றார் சாமுவேல் பெருமூச்சு விட்டு.

''மேல் தோற்றம் வச்சு நம்ப முடியாது போலவ!''

''இந்த டான் கலிலியோ கேஸ்ல சோறு தண்ணி இல்லாம ஓவரா ஸ்டிரெயின் பண்ணிக்கிட்டதால வந்த வினை. பாவம்... சரி, அது இருக்கட்டும். நான் வந்த விஷயமே வேறே. கிட்நாப் செய்தவங்க திரும்பவும் காண்டாக்ட் செய்தாங்களா?''

''இன்னும் இல்லை சார்!''

''ஏதும் மறைக்கலையே?''

''இல்லை. ஒரு தடவை பட்டது போதும் சார்.''

''உங்களைக் காக்க வெச்சு நர்வசாக்கிட்டுத் திடீர்னு போன் செய்வான் பாருங்க. 'மறக்காம' எனக்குத் தெரிவியுங்க; என்ன...''

''செய்யறேன் சார்'' என்றவன் கெஞ்சலான குரலில் ''எப்படியாவது என் மனைவியைக் கண்டுபிடிச்சுக் கொடுத்துருங்க'' என்றான் தன் நடிப்பைப் பூர்த்தி செய்து.

''ஷ்யூர்'' என்றவர் விரல் சொடுக்கி, ''சொல்ல மறந்துட்டேனே! ஹோட்டல் வாசல்ல பாரா பார்த்த கான்ஸ்டபிள் ஸாக்குக் கவனம் பத்தலைன்னு அவங்களை ஸ்டேஷனுக்கு அனுப்பிட்டுப் புதுசா ஒரு எஸ்.ஐ. போட்டிருக்கேன். மூணு பேருக்குச் சமானமானவரு; நம்பகமானவரு'' என்றார்.

**பி**ரகாஷ் பிரேக்பஸ்டிற்குப் பிறகு கிளம்பினான். பின்பற்றிய புது ஆசாமியைக் கணித்தான். எஸ்.ஐ. நடுத்தர வயது. பெரிய புஸ்தி மீசைக்குப் பொருந்தாத மிதமான உடல்வாகு. அவர் இடுப்பிலிருந்த ரிவால்வரைக் கவனித்தான். நாளை இவரை...

'குட் ஹெல்த்' நர்சிங் ஹோமில் தனியறை அது. ஈசிஜி மானிட்டரில் பச்சை வரி ஓடி இதய ஆரோக்கியம் கண்காணிக்கத் தேவதேவன் ஆழ்ந்த உறக்கத்திலிருந்தார். அருகிலிருந்த நர்ஸ், அபாயக் கட்டம் தாண்டி விட்டதாகத் தெரிவித்தாள். கொண்டு சென்ற மலர்க் கொத்தை வைத்துவிட்டுத் திரும்பினான் பிரகாஷ்.

மதியம் போன் செய்த ராஜசேகருக்கு ஓரளவு மட்டுமே விஷயம் சொன்னான். விசனமானார். வருவதாகச் சொன்னவரைத் தடுத்து விட்டான். சமாளித்துக் கொள்வானாம். இருக்கிற பணம் போதுமென்றான். மேலும் அவசியம் எனில் போன் செய்வானாம்.

**ம**றுநாள் - சனி - இரவு 9:00. பிரகாஷ் ஏறக்குறையத் தயாராகி விட்டான். அணிந்திருந்த ஜெர்கினின் ஜிப் இழுத்து விட்டுக் கொண்டான். முன் தினம் வாங்கி வந்திருந்த - பட்டன் கத்தி எடுத்து ஜீன்ஸ் பேண்ட் பாக்கெட்டினுள் போட்டுக் கொண்டான் ; அந்தச் சிறிய ஹாக்சா பிளேடை அணிந்திருந்த எலாஸ்டிக் கால் சாக்சினுள் செருகிக் கொண்டான். அவசரத்திற்கு உதவும் இரகசிய ஆயுதம் இந்த ஹாக்சா என்று நினைத்தான்.

தான் எடுத்திருப்பது பெரிய ரிஸ்க் என்பதை அவன் அறிந்திருந்தான். சிந்துவை மீட்பதற்குத் தன் உயிரைப் பணயம் வைத்துப் போராடுவது தவிர, தனக்கு வேறு வழி இல்லை.

'என் உயிரான சிந்து ஆபத்தில்...' என




- எஸ். முகம்மது யூசுப்



அவன் மனம் சதா உச்சாடனம் செய்ய, வலுவான அவன் உடல் முறுக்கேறிக் கொண்டது. தீட்டப்பட்ட மூளையுடன், உச்ச பட்ச எச்சரிக்கையுடன் புறப்பட்டான். புற்பாதையில் நடந்தான். எஸ்.ஐ.யை முடக்கிய பின்தான் கார் எடுக்க வேண்டும். அவன் கிளம்பிக் காரில் செல்வதை அவர் அறியக் கூடாது. முதலில் சப்-இன்ஸ்பெக்டரை இருட்டுக்கு இட்டுச் செல்ல வேண்டும். பிறகு... பிறகு...

ஹோட்டல் வாசலின் வரவேற்பு வளைவைக் காஷுவலாகக் கடந்தான். அவன் கைகள் பாக்கெட்டினுள். இரவு வாக் போல - நிதானமாக நடந்தான்.

நிலவு முகவரி தொலைத்திருந்ததில் பூரண இருள்; குளிர் மிகுந்திருந்தது. பிரதேசத்தின் மயான மௌனம் மீறி, பின்பற்றும் எஸ்.ஐ. யின் காலணி ஓசை கேட்டது. 'வரட்டும்'.

அரை கி.மீ. தூரம் நடந்திருப்பான். பாதையினின்று சரேலென்று விலகினான். அந்த மகா மர மறைவை நாடினான். காத்திருந்தான். காலணியோசை உரத்துக் கொண்டு வந்தது. எஸ்.ஐ. நெருங்குகிறார். இதோ... இப்போது...

''ஐயோ... யாராவது காப்பாத்துங்களேன்... ஆ'' பிரகாஷ் அலறினான்.

அடுத்த நொடி முடிவில், பதற்றமுடன் எட்டிப் பார்த்த சப்-இன்ஸ்பெக்டர் மீது பாய்ந்தான். கூர்க்கமான முஷ்டியால் மூன்று குத்துக்கள்.

இவனுடைய வலுவான ஆறடி உயர உடல்வாகிற்கு அவர் ஈடில்லை. என் ஆருயிர் மனைவியை மீட்பதிலிருந்து எவரும்... எவருமே என்னைத் தடுக்க முடியாது. மனத்திற்குள் வெறியுடன் சொல்லிக் கொண்டான். சடுதியில் மயங்கிச் சரிந்தவரிடமிருந்து ரிவால்வர் கவர்ந்து கொண்டான். எஸ்.ஐ. எழுந்திருக்க இன்னும் ஒரு மணி நேரமாகும். இது போதும் அவனுக்கு.

ஹோட்டல் திரும்பி, காரில் நோட்டுக் கட்டுக்கள் அடங்கிய பெட்டி வைத்து, கிளம்பி; கொடைக்கானலை விட்டு விரைவாய் விலகிக் கொண்டிருந்தான். இரவு; போக்குவரத்து அறவே அற்ற சாலை; இறக்கம். கார் இலகுவாய் வழுக்கிச் சென்றது.

கடைசி 'Ω' திரும்பியதும் அந்தத் தடையைப் பார்த்தான் பிரகாஷ். குறுகிய சாலையின் குறுக்காக ஒரு தள்ளு வண்டி. அதில் குவிந்திருந்த ஆப்பிள் பழங்கள். சாலையில் எவருமில்லை. சுற்றிலும் பார்த்தான்.

சற்றுத் தொலைவில் ஒரு பலா மரப் பக்கத்தில் ஒரு குடிசை தெரிந்தது. கார்



ஆசிரியர் : ஏண்டா! ஆற்றுக்கு அருகே வாழ்றே; நீச்சல் கற்றுக் கொள்ளாமல் இருக்கியே?

மாணவன் : இதிலென்ன சார் ஆச்சர்யம்? உங்களை எப்பவும் காற்றுச் சூழ்ந்திருக்கு; அதனால நீங்க பறக்கக் கற்றுக்கிட்டீங்களா என்ன?

- ஏ. ஆர். எம். இஸ்மாயில்

ஹாரனை அமுக்கினான்.

மூன்றாம் முறை ஒலிக்கச் செய்த போது ஒரு முண்டாகப் பெரியவர் ஓடோடி வந்து பதற்றமாகக் கும்பிட்டார்.

''மன்னிச்சுருங்க தம்பி. வண்டி டயருக்கு அடியில வச்சிருந்த கல்லு விலகிருச்சு போல! நாளை யாவாரத்துச் சரக்கு...'' என்று சொல்லி விட்டு வண்டியைத் தள்ளிக் கொண்டு போய் ஓரமாக ஒதுங்க, காரைக் கிளப்பி வேகமெடுத்தான்...

நடுநிசி தாண்டியும் மதுரை 'ஜேஜே' யென்று சந்தடியுடன் இருந்தது.

அமர்த்திக் கொண்ட அறை ஜன்னலிலிருந்து சரவிளக்கு மின்ன மீனாட்சியம்மன் கோயில் கோபுரம் தெரிந்தது. கொடை டிரிப் முடிந்ததும் மதுரை கோவில்கள் பார்க்க சித்து ஆசைப்பட்டது அவன் நினைவுக்கு வந்தது. 'காத்திரு கண்ணே. விரைவில் உன்னை மீட்டு விடுகிறேன். பிறகு உன் விருப்பம் யாவையும் நிறைவேற்றுவதுதான் என் வாழ்வின் லட்சியம்...'

மதுரையில் மறுநாள் மதியம் வரை டான் தொடர்பு கொள்ளாதது மர்மமாயிருந்தது. குழம்பினான்.

மாலை லாட்ஜை விட்டு வெளியே வந்தான். நடைபாதையில் கடைகள் ஆக்ரமிக்க, சற்று நெரிசலாயிருந்தது. நடந்தான்.

''கழுகைக் காணோம்!''

திடீரென்று அவனருகில் ஒரு குரல் மென்மையாக ஒலித்தது.

படபடப்பான பிரகாஷ், ''விலகுது விபரீதம்!'' எனக் கூறி, சரேலென்று நிமிர்ந்தான்.

(தொடரும்)

# மாமூல் மாணிக்கம்

ஏட்டய்யா டியூட்டி ரிஜிஸ்டரில் கையெழுத்துப் போடும்போதே முடிவு செய்தார் - இன்றைக்கு ஒரு நூறு ரூபாயாவது மாமூல் வசூலித்து விடவேண்டுமென்று. ஒரு வாரமாக பஜார் பக்கம் செல்லவில்லை. எஸ்.பியும், டி.எஸ்.பியும் மாறி மாறி விஸிட் வந்ததினால் ஸ்டேஷனிலேயே இருந்ததன் காரணமாக மாதக் கடைசி என்பதைக் காலையில் ருக்மணி செலவுக்குப் பணம் கேட்ட போதுதான் உணர்ந்தார்.

''மாணிக்கம்....'' எஸ்.ஐ. கூப்பிட்டார்.

''எஸ் ஸார்.''

''நாளைக்கு எட்டுகுடி திருவிழா... அந்த பிக்பாக்கெட் சேகரையும், முத்துவையும் கொண்டு வந்து ஸ்டேஷன்ல போடு.... என்ன....?''

''எஸ் ஸார்'' என்றுவிட்டு, லட்டியை எடுத்துக் கொண்டு ஸ்டேஷனை விட்டு வெளியே வந்தார்.

சைக்கிளை ஸ்டாண்டிலிருந்து விடுவித்து மெதுவாகத் தள்ளினார்.

ஆர்ச் வளைவைத் தாண்டியதுமே சாலையோரத்தில் வரிசையாக உட்கார்ந்திருந்த காய்கறிக் கடைக்காரிகள் கண்ணில் பட... போணி செய்து விடலாம் என்று முடிவு செய்தார்.

சைக்கிளை ஓரமாக நிறுத்திவிட்டு, லட்டியால்... சாலையை ஓங்கித் தட்டிக் கொண்டே கத்தினார்: ''ஏய்.... கடையத் தூக்கு.... எத்தினி தடவை சொல்லியிருக்கேன்.... ரோட்டோரத்துல கடை போடாதேன்னு....'' என்றபடி அந்த மளிகைக் கடை வாசலில் நின்று கொண்டார்.

எந்த கடைக்காரியுமே ஏட்டய்யாவின் கத்தலைப் பொருட்படுத்தவில்லை. மாறாக ஒவ்வொரு கடைக்காரியாக எழுந்து வந்து மறைவாக நின்ற ஏட்டய்யாவின் கைகளில் பணத்தைத் திணித்து விட்டுப் போனார்கள்.

ஏட்டய்யா பணத்தைப் பார்க்காமலேயே அது எத்தனை ரூபாய் என்பதை உணர்ந்தார். பத்து வருட எக்ஸ்பீரியன்ஸ்! பேங்க் கேஷியரைப் போல தடவிப் பார்த்ததுமே ஏட்டய்யாவால் பணத்தைத் தரம் பிரிக்க முடியும். கிழிந்த, செல்லாத நோட்டை யாராவது கொடுத்தால்... கை தன்னிச்சையாக அவர்கள் தலைமுடியைப் பிடிக்கும்!

எல்லாக் கடைக்காரிகளும் கப்பம் கட்டி விட்டார்களா என்று பார்த்தார். திருப்தியடைந்தவராகச் சைக்கிளை நகர்த்தினார்.

நேதாஜி சாலையில் சைக்கிளில் மெதுவாக ஊர்ந்தார், கண்களை இருமருங்கிலும் அலையவிட்டவாறு.

ஏட்டய்யாவுக்குத் தான் இன்னும் ஏட்டாகவே இருப்பதில் வருத்தம் இலேசாக உண்டு. எவ்வளவு நாள்தான் தேடிப் போய் மாமூல் வாங்குவது. சப்-இன்ஸ்பெக்டராக இருந்தால் இந்த அலைச்சல் இல்லை. வீட்டைத் தேடி கவர் வரும். நான்கு லாட்ஜ்களிலிருந்து மாதம் பிறந்ததும் வரும் எட்டாயிரம்.... போதும்! சில்லறைத்தனமாக இப்படி அலைய வேண்டியதில்லை.

பஜனை மடச் சந்தை நெருங்கிய போதுதான் அவர்களைக் கவனித்தார் ஏட்டய்யா. சாராயம் விற்கும் கோவிந்தனும்... ரெங்கனும். உடன் சைக்கிளை நிறுத்தி ஸ்டாண்ட் போட்டுவிட்டு அவர்களை நோக்கி நடந்தார். ஏட்டய்யா தங்களை நோக்கி வருவதைக் கண்டு பயப்படாமல், ''என்ன ஏட்டய்யா... சௌக்யமா?'' என்றனர் கோரஸாக.

ஏட்டய்யா நெளிந்தார்.

''ஏய்... ஏட்டய்யாவுக்கு ரெண்டு வடையும்.... ஒரு டீயும் கொண்டு வாடா....'' பேங்க் வாசலில் நின்றிருந்த டீ வண்டியைப் பார்த்து கோவிந்தன் கத்த....

''அதெல்லாம் வேணாம் கோவி.... (ஏட்டய்யா கோவிந்தனைச் செல்லமாக அப்படித்தான் அழைப்பார்) நான் போகணும்... ஜோலியிருக்கு....'' என்றதும், கோவிந்தன் ரெங்கனைப் பார்த்தான். ரெங்கன் பையிலிருந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து ஏட்டய்யா சட்டைப்

திருவாரூர் பாபு

பையில் செருகினான்.

ஏட்டய்யாவுக்கு வெறும் பத்து ரூபாய் கொடுத்தது என்னவோ போல் இருந்தது.

''வியாபாரமெல்லாம் படுஜோரா நடக்குதுன்னு கேள்விப்பட்டேனே.....'' ஏட்டய்யா இழுத்தார்.

''ஜோரா நடக்குதுதான்... மாறி மாறித் தான் நீங்க வந்துர்றீங்களே.... அதுக்கே தினமும் நூறு, இருநூறு வேண்டியிருக்கு'' என்றான் கோவிந்தன் வெறுப்பாக.

''எனக்குத் திருப்தியில்ல ரெங்கா....'' ஏட்டய்யா மாமூல் போதாததை நாசூக் காகத் தெரிவித்தார்.

''எல்லாம் போதும்.... பிரச்னை பண் ணாத மாமூல் மாணிக்கம்..... அப்புறம் உங்க எஸ்.ஐக்கு வேலை போயிடும்.''

ஏட்டய்யாவை அந்த வார்த்தை சுருக் என்று தைத்தது. உடன் சைக்கிளை நகர்த் தினார்.

**பா**லத்தைத் தாண்டி அண்ணா சாலை யில் நுழைந்தபோது, ரோட்டோரத்தி லிருந்து குரல் வந்தது:

''ஏட்டய்யா... ஏட்டய்யா... மாமூல் ஏட்டய்யா...

நீட்டய்யா... நீட்டய்யா... உன் கையை நீட்டய்யா....''

''மாணிக்கம்... மாணிக்கம்.. மாமூல் மாணிக்கம்

காணிக்கை குடுத்தாக்க இளிக்கும் மாணிக்கம்''

ராகமாக எவனோ பாடினான். ஏட்டய்யா கண்டு கொள்ளாதமாதிரி சைக் கிளைச் செலுத்தினார். பட்டப்பகலில், யூனிஃபார்மில் பஜாரில் நுழைந்து மாமூல் வாங்கும் ஒரு போலீஸ்காரன்.... வெட்கம், மானம், ரோஷம் இவற்றையெல்லாம் துறந்துவிட வேண்டும் என்கிற அடிப் படைத் தகுதியை ஏட்டய்யா பெற்றிருந்





❑ குற்றாலத்தில் குற்றாலநாதருக்கும் அம்மனுக்கும் நாள்தோறும் சுக்குக் காப்பியை நைவேத்யம் செய்கிறார்கள். சுக்கு, மிளகு போட்டு கஷாயம் வைத்து இருவருக்கும் படைக்கிறார்கள். கோவிலுக்குப் பின்னால் இரவு பகல் எந் நேரமும் குற்றால அருவி கொட்டிக் கொண்டே இருக்கிறது. அது அப்பன் அம்மன் இருவர் தலையிலும் விழுவதாக ஐதீகம். இப்படி எந் நேரமும் தலையில் தண்ணீர் கொட்டிக் கொண்டே இருப்பதால், இருவருக்கும் சளி, காய்ச்சல் என்று வந்து விடக் கூடாது அல்லவா! அதற்காகத்தான் சுக்குக் காப்பி!

- ஆ. ஜெயலட்சுமி

தார். ஆகவே அந்தப் பாட்டு அவரை எந்த விதத்திலும் பாதித்ததாகத் தெரியவில்லை.

ஏட்டய்யா நாகை சாலையில் நுழைந்த போது, எஸ்.ஐ. கொண்டு வரச் சொன்ன சேகரும், முத்துவும் கண்ணில் பட்டனர். உடன் சைக்கிளை ஓரங்கட்டி நிறுத்தி விட்டு, அவர்கள் கண்ணில் படாதவாறு மறைந்து சென்று சட்டைக் காலரைக் கொத்தாகப் பிடித்தார்.

''நடங்கடா ஸ்டேஷனுக்கு....''

''ஏ ட் ட ய் ய ா... சட்டையெல்லாம் பிடிச்சிக்கிட்டு.... பு து ச ா இருக்கு... விடுங்க ஏட்டய்யா...'' என்றதும் சட்டையை விட்டார்.

''எஸ்.ஐ. ஸ்டேஷனுக்குக் கொண்டு வரச் சொன்னாரா...?'' என்றவர்கள் ஒரு இருபது ரூபாய் நோட்டை ஏட்டய்யா கையில் திணிக்க... ஏட்டய்யா சந்தோஷத்தின் உச்சிக்கே போனார்.

''கண்டுக்காத ஏட்டய்யா... நாளைக்கு எட்டுகுடி திருவிழா.... மொத்தத்துல உனக்குப் பத்து பர்சன்ட்... என்ன...? எஸ்.ஐ. கிட்டே, 'வீட்டுக்குப் போனேன்.... அவனுக இல்லேங்கன்னுடு!''

ஏட்டய்யா அவர்களுக்கு ச ல் யூ ட் வைக்கலாமா என்று யோசித்து, பிறகு வேண்டாமென முடிவு செய்து நகர்ந்தார்.

எல்லையம்மன் கீழ்வீதியில் நுழைந்த போது, விறகுக் கடை வாசலில் விறகு மலையாகக் குவிந்து கிடந்தது. சாலையில் விறகு சிதறிக் கிடக்க... ஏட்டய்யாவின் கடமை நெஞ்சம் பதறியது. சைக்கிளை நிறுத்திவிட்டு, பாய்ந்தார்.

''ஏன்யா... எத்தனை தடவை சொல்லியிருக்கேன்... நடுரோட்டுல விறகு இறக்காதேன்னு.... ம்....''

விறகுக் கடை முதலாளி, ''உள்ள வாங்க ஏட்டய்யா'' என்றதும் உள்ளே சென்றார். ஒரு ஐந்து ரூபாய்த் தாளை ஏட்டய்யா கையில் திணிக்க, ஏட்டய்யா நகர்ந்தார்.

சாலையில் விறகு கிடந்து போக்குவரத்துத் தடைபட்டால், அதை டிராஃபிக் போலீஸ் அல்லவா கேட்கவேண்டும்... உனக்கென்ன... என்று கேட்கத் தைரியம் இல்லை. வேறு ஏதாவது கேஸில் மாட்ட வைத்து ஸ்டேஷனுக்கும் கோர்ட்டுக்குமாக அலைய வைத்து விடுவார்களோ என்கிற அச்சம்.

ஏட்டய்யா உற்சாகமாகச் சைக்கிளை மிதித்தார். மாசம் முப்பது கேஸ்களைப் பிடிக்க வேண்டும் என்கிற டார்கெட்டை ஒரு தடவை கூட எட்டாத ஏட்டய்யாவுக்குக் காலையில் இன்று எப்படியாவது ஒரு நூறு ரூபாயாவது வசூல் செய்து விட வேண்டும் என்று தான் போட்ட டார்கெட்டை இரண்டு மணி நேரத்தில் எட்டி விட்ட மகிழ்ச்சி, பிரவாகமாய் முகத்தில் தெரிந்தது.

வீட்டுக்குச் சென்று சாபிட்டுவிட்டு வரலாம் என்று சைக்கிளைத் திருப்பினார். கீழ்வீதி முனையைக் கடக்கும்போது, கூட்டத்தைக் கண்டு சைக்கிளை நிறுத்தினார். மீன் வியாபாரம் சுறுசுறுப்பாக நடந்து கொண்டிருந்தது.

ஏட்டய்யா லட்டியை உருவிக் கொண்டு கூட்டத்தை நோக்கிச் சென்றார்.

''ஏண்டா கசமாலம்... உங்களுக்குத்தான் அங்க மார்கெட் கட்டிக் கொடுத்திருக்குல்ல.. இங்க என்னடா கூட்டம் போட்டுக்கிட்டு வியாபாரம்'' என்றபடி கூட்டத்தை நோக்கிப் பாய... கூட்டம் பின் வாங்கியதும், மீன் விற்பவர் ஓடி வந்தார்.

''ஏட்டய்யா நாலு நாளைக்குப் பிறகு இன்னிக்குத்தான் கடை போட்டிருக்கேன்... என்னை விட்டுடுங்க...''

ஏட்டய்யா அதிகாரமாகக் கேட்டார்.

''என்ன மீன் வச்சிருக்க....?''

''இறால்.. நண்டு... போத்தல்.... இளங்கான் இருக்கு... ஐயாவுக்கு இறால் அரை கிலோ தரவா....?''

''வஞ்சிரம் இல்ல?'' ஏட்டய்யா கேட்டார்.

''இருக்கு... கிலோ அம்பது ரூபா!'' அவன் தயக்கமாகச் சொன்னான்.

''எனக்கு கிலோ வேணாம்... ஒரு நாலு மீன் கொடு....'' என்றவர், பக்கத்தில் கிடந்த பிளாஸ்டிக் பையை எடுத்து நாலு மீன்களை எடுத்துப் போட்டுக் கொண்டு

அவன் தவிப்பதை லட்சியம் செய்யாமல் நகர்ந்தார்.

ஏட்டய்யா வீட்டு வாசலில் சைக்கிளை நிறுத்தி ஸ்டாண்ட் போடும்போது ருக்மணி குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்தாள்.

''என்னடி?''

''குழந்தை மண்ணெண்ணெயைக் குடிச்சிடுச்சய்யா!''

அடுத்த விநாடி பளாரென்று ஒரு அறை விழுந்தது ருக்மணி கன்னத்தில்.

''ஏண்டி முண்டம் மண்ணெண்ணெயைக் குழந்தை எடுக்கிற மாதிரி வச்ச?'' என்றவர் குழந்தையைத் தூக்கிக் கொண்டு, சைக்கிளில் ஏறினார். ருக்மணி படபடப்பாய்ப் பின்னாலயே ஓடி வந்தாள்.

பத்து வருடங்களுக்குப் பிறகு பிறந்த குழந்தை என்பதால் ஏட்டய்யாவுக்குக் குழந்தை மீது பாசம் அதிகம்.

டாக்டர் வீட்டுக்கு முன் ஏகப்பட்ட கூட்டம். இரண்டு ரூபாய் பீஸ் வாங்கிக் கொண்டு, ஒரு ஊசி போட்டு, மாத்திரையும் கொடுக்கும் டாக்டர். அதனால் தான் இந்தக் கூட்டம்.

ஏட்டய்யா குழந்தையுடன் டாக்டரை நோக்கிப் பாய்ந்தார்.

''டாக்டர்... குழந்தை மண்ணெண்ணெயைக் குடிச்சிட்டுச்சு டாக்டர்!''

உடன், டாக்டர் குழந்தையை வாங்கி, படுக்க வைத்து, கண்ணைத் திறந்து பார்த்தார். வாயைத் திறந்து பார்த்தார்.

''எவ்வளவு குடிச்சது?''

''அரை பாட்டிலுங்க'' ருக்மணி பதில் சொன்னாள்.

''பயம் ஒண்ணும் இல்ல'' என்றவர், ஒரு ஊசியைப் போட்டுவிட்டு, குழந்தையை உள்ளே கொண்டு சென்றார்.

குடலைச் சுத்தம் செய்து, இன்னொரு ஊசி போட்டுவிட்டு, ''ப ய ப் ப ட வேணாம்... ஒரு மணி நேரம் கழிச்சித் தூக்கிட்டுப் போங்க....'' என்றார்.

ஏட்டய்யா பையில் கையைவிட்டுப் பணத்தை அள்ளி டாக்டரிடம் நீட்ட... டாக்டர் மறுத்தார்.

''நான் பீஸ் ரெண்டு ரூபாதான் வாங்குவேன்... அதுவும் உங்ககிட்ட வாங்க மாட்டேன்... ஏன்னா ஊரைக் காவல் காக்கிற போலீஸ்காரர் நீங்க.... ராத்திரி பகலுன்னு பார்க்காம ஊரைச் சுத்தறீங்க... உங்களுக்கு உதவி செய்ய எனக்குச் சந்தர்ப்பம் கிடைச்சதே பெருமையா இருக்கு.....''

ஏட்டய்யா ஸ்தம்பித்துப் போய் நின்றார். யாரோ நெஞ்சில் சம்மட்டியால் அடித்தது போல இருந்தது.



# பட்டின் பளபளப்பு பாதி விலைக்கு!

**தூ**ய பட்டுப் புடைவைகளின் விலை எட்டாத உயரத்துக்குப் போய் விட்ட இந்தக் காலத்தில் சில்க் - காட்டன் சேலைகள் பிரபலமாகியுள்ளன.

தூய பட்டு (காஞ்சிபுரம் அல்லது ஆரணி), செயற்கைப் பட்டு, பாலியஸ்டர் பட்டு போன்ற ஏதாவது ஒன்றுடன் பருத்தி இழைகளையும் இணைத்து இப் புடைவைகள் நெய்யப்படுகின்றன. 57 சதவிகிதம் நூலிழை; 43 சதவிகிதம் பட்டு அல்லது பாலியஸ்டர் இழை என்ற விகிதாசாரம் கடைப்பிடிக்கப்படுகிறது.

தூய பட்டுப் புடைவைகளின் பாரம் பரிய நிறச் சேர்க்கை, வடிவமைப்பு இரண்டுமே இவற்றில் இருக்கும். விலை மட்டும் பட்டுச் சேலைகளை விட மிகக் குறைவு : சரிகை வேலைப்பாடு இன்றி, பட்டு நூலைக் கொண்டு எளிமையான வேலைப்பாடு செய்திருப்பின் 475 முதல் 650 ரூபாய் வரை விலை. சரிகை கொண்டு நகாசு நிரம்பிய வேலைப்பாடு செய்திருப்பின் 650 முதல் 2000 ரூபாய் வரை ஆகும்.

புடைவைகளுக்குப் பொருத்தமான சோளிகளுக்கான துணியும் அழகிய வடிவமைப்பில் புடைவையுடன் சேர்த்து நெய்யப்படுகிறது.

வெயில் காலத்திலும் உடுத்த இலகுவாக உள்ள இச் சேலைகள் இப்போது எல்லோரையும் கவர்கின்றன.

படங்கள் : யோகா
புடைவைகள், தகவல்கள்
உதவி : விபா
நியூ ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ்
சென்னை - 28.

ஃபாஷன் பக்கம் :



# சரித்திரம் படைக்கும் பங்கு மார்க்கெட்!

கடந்த சில வாரங்களாகவே பங்கு மார்க்கெட்டில், ஷேர்களின் விலைகள் சரித்திரம் படைக்கும் அளவுக்கு உயர்ந்து வருகின்றன. தவிர, பல பிரபல நிறுவனங்கள் விரிவாக்கத்துக்கும் புதிய தொழில் தொடங்கவும் மூலதனம் கோரி பங்கு மார்க்கெட்டுக்கு வந்த போது பொது மக்களின் அமோக ஆதரவைப் பெற்றன. இதற்கெல்லாம் பல காரணங்களுள் முக்கியமானது, பர்மிட் லைசென்ஸ் முறை ஒழிக்கப்பட்டு, சுதந்திரத் தொழில் கொள்கை அமுல்படுத்தப்படுவதுதான். பட்ஜெட்டும் தொழில் வளர்ச்சிக்குச் சாதகமாக அமைந்திருக்கிறது.

தனியார் துறையில் மேலும் பல பிரபலமான நிறுவனங்கள் பொது மக்களிடம் மூலதனம் கோரி பங்கு மார்க்கெட்டுக்கு வருகின்றன. மார்ச், ஏப்ரலில் இந்த நிறுவனங்களின் அறிவிப்புக்களை எதிர்பார்க்கலாம். கீழே தரப்படும் பட்டியல், வாசகர்கள் முதலீடு செய்ய ஏற்றவை. நல்ல எதிர்கால வளர்ச்சிக்கான வாய்ப்புக்களை உள்ளடக்கியவை.

## மார்கன் இண்டஸ்டிரீஸ்

'செல்லோ டேப்' என்று பொதுவாக வழங்கப்படும் 'கிராஃப்ட் பிவிஸி டேப்'களைத் தயாரிக்கும் நிறுவனம் இது. உறுதியான இந்த டேப்கள், எந்தப் பொருளையும் பொட்டலம் கட்டும் போதும் பெட்டிக்குள் 'பாக்' செய்யும் போதும், எங்கும் எல்லோராலும் பயன்படுத்தப்படுகிறவை. நாளுக்கு நாள் இதன் தேவை அதிகரித்துக் கொண்டே போகிறது. இதனைத் தயாரிக்க, கடலூர் அருகே, குடிக்காடு என்னும் ஊரில் ஸிப்காட் தொழிற்பேட்டையில் 'மாடர்ன் இண்டஸ்ட்ரீஸ்' அமைகிறது. தாய்வான் நாட்டைச் சேர்ந்த 'கோமெக்ஸ் மிஷினரி கம்பெனி'யுடன் கூட்டாகத் தயாரிப்பில் ஈடுபடுகிறார்கள். பொது மக்களுக்கு ரூ 324 லட்சம் பெறுமானமுள்ள பங்குகள் விநியோகிக்கப்பட உள்ளன. முந்நாள் ரயில்வே போர்டு சேர்மன் கே. ஏ. ராஜன், இந்த நிறுவனத்தின் இயக்குனர் குழுவுக்குத் தலைவர்.

## வாட்டர் பேஸ் லிமிடெட்

"தபார்" என்ற பிரபலமான குருப், இந்த நிறுவனத்தையும் ஆரம்பித்து நடத்த இருக்கிறது. இறால் என்று தமிழில் வழங்கப்படும் Prawn என்ற கடல் ஜீவராசியை ஏராளமாக உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்வதே இந் நிறுவனத்தின் நோக்கம். ஆந்திரப் பிரதேசம் நெல்லூரில் அமைகிறது இந்தத் தொழில். ஏற்றுமதிக்கு ஏராள வாய்ப்பு உள்ளது. மேல் நாட்டவர் விரும்பிச் சாப்பிடும் இதனை, ஆண்டொன்றுக்கு 15 ஆயிரம் டன் அளவில் ஏற்றுமதி செய்வது இவர்கள் இலக்கு. பங்குகளையும், பகுதி அளவில் பங்குகளாக மாற்றக் கூடிய 'டிபன்சர்' கடன் பத்திரங்களையும் பொது மக்களுக்கு இந் நிறுவனம் விநியோகிக்க உள்ளது. பொது மக்களிடம் எதிர்பார்க்கப்படும் மூலதனம் ரூ 12½ கோடி.

## பிவானி ஸிந்தடிக்ஸ்

ஏற்றுமதிக்காகப் பருத்தி ஜவுளியையும் செயற்கை இழை கலந்த பருத்தி ஜவுளியையும் தயாரிக்கவுள்ள இந் நிறுவனம், ஹரியானா மாநிலத்தில் அமைகிறது. 'உற்பத்தி முழுவதும் ஏற்றுமதிக்காகவே' என்று திட்டமிட்டு, ஏற்கெனவே ஒரு பிரபலமான ஜப்பானிய நிறுவனத்துடன் ஒப்பந்தமும் செய்து கொண்டு விட்டார்கள். இதன்படி, Toyoto Tsusho Corporation என்ற அந்த மிகப் பெரிய ஜப்பானிய நிறுவனம், அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு உற்பத்தி முழுவதையும் வாங்கிக் கொள்ளும்! 'பிவானி ஸிந்தடிக்ஸ்' பொது மக்களிடம் ரூ 757 லட்சம் கோருகிறது.

## எஸ். ஐ. பிராப்பர்டி டெவலப்மெண்ட்

சென்னையிலும் பெங்களூரிலும் ஏராளமான ஃபிளாட்டுகளையும் காரியாலயக் கட்டிடங்களையும் கட்டி, விற்று, பிரபலமடைந்துள்ள நிறுவனம் எஸ். ஐ. இப்போது மேலும் நான்கு குடியிருப்புத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. வீடுகள், ஃபிளாட்டுகள், காரியாலயங்கள் ஆகியவற்றுக்கு உள்ள கிராக்கி அனைவரும் அறிந்ததே. தனது மூலதனத்தை அதிகரித்துக் கொண்டு, புதிய திட்டங்களில் ஈடுபட எண்ணும் எஸ். ஐ. மூன்று கோடி பெறுமானமுள்ள பங்குகளைப் பொது மக்களுக்கு வழங்கவிருக்கிறது. இந்த நிறுவனம் ஏற்கெனவே நன்கு வேரூன்றி, பெங்களூர், சென்னையில் பிரபலமடைந்துள்ள ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது.

- வி. கோபாலன்

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

கல்கி மார்ச் 16, 1942

## ''அக்னியே ஸ்வாஹா''

**இ**தற்கு முந்திய யுத்தங்களில் கேட்டிராத புதிய யுத்த முறைகள் பல இப்போது நடக்கும் யுத்தத்தில் அமுலுக்கு வந்திருக்கின்றன. இவற்றில் ஒன்று ''அக்னியே ஸ்வாஹா'' முறை. இங்கிலீஷில் இதற்கு 'ஸ்கார்ச்டு எர்த் பாலிஸி' என்று பெயர். அதாவது ஒரு கட்சியின் படைகள் பின் வாங்கும் போது, கைவிடும் பிரதேசங்களில் உள்ள சகல பொருள்களையும் புல் பூண்டு உள்படக் கொளுத்திச் சுடுகாடாக்கி விட்டுச் செல்வது. முன்னேறி வரும் எதிரி எவ்வித வசதியும் கிடைக்காமல் திண்டாட வேண்டுமென்பது இந்த முறையின் நோக்கம். இதை ருஷியர்கள் மிகத் திறமையாகவும் பரிபூரணமாகவும் கையாண்டு நல்ல பலன் அடைந்திருக்கிறார்கள்.

*- என்ன சேதி*

## இந்திரா பிரியதர்ஸினி

**ந**மது சென்ற இதழின் அட்டையைப் பிரசித்தி பெற்ற மணமகன் ஒருவரின் படம் அலங்கரித்தது. இந்த இதழின் அட்டையைப் பிரசித்தி பெற்ற கல்யாணப் பெண் ஒருவரின் படம் அலங்கரிக்கிறது. ஸ்ரீமதி இந்திரா பிரியதர்ஸினி, பண்டித ஜவாஹர் லால் நேருவின் ஏக புதல்வி. ஸ்ரீமதி கமலா நேரு காலஞ் சென்ற பிறகு ஜவாஹர் லால்ஜியே இந்திராவுக்குத் தாயும் தந்தையுமாயிருந்து பாதுகாத்து வந்தார். 'வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போம் என்ற விந்தை மனிதர்' கூட்டத்தைச் சேர்ந்தவரல்ல ஜவாஹர்லால்ஜி. எனவே, இந்திரா நேரு மேனாட்டிலும் கீழ் நாட்டிலும் விஸ்தாரமான யாத்திரைகள் செய்திருக்கிறார். அவருக்கும் ஸ்ரீ பிரோஸ் காந்திக்கும் விரைவில் திருமணம் நடைபெறுமென்ற செய்தியை ஜவாஹர்லால்ஜியின் அறிக்கையிலிருந்து அறிந்து தேசம் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தது. ஸ்ரீ பிரோஸ் காந்தி, மகாத்மா காந்தியின் உறவினர் அல்ல; அவர் ஒரு பார்ஸி இளைஞர். நேரு குடும்பத்தாரோடு நீண்ட நாள் சிநேக உரிமை பூண்டவர். மனமொத்த காதல் காரணமாகக் கல்யாணம் செய்து கொள்ளப் போகும் இந்திராவும், பிரோஸ் காந்தியும், ஜவாஹர்லாலின் அநுமதியைப் பெற்றதோடு, மகாத்மாவின் மனப்பூர்வமான ஆசியையும் பெற்றிருக்கிறார்கள்.

*- அட்டைப்பட விளக்கம்*



## தூதர் வருகிறார்

**யு**த்த மந்திரி சபையில், பிரதம மந்திரி சர்ச்சிலுக்கு அடுத்த ஸ்தானத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டார், ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ். இத்தகையவர் இந்தியாவின் அரசியல் பிரச்னையைத் தீர்ப்பதற்காகத் தூதராக வருவது ஒரு சுப சூசகம் என்றே சொல்ல வேண்டும். அவர் கொண்டு வரும் பிரிட்டிஷ் சர்க்காரின் முடிவுகளைக் காட்டிலும் அவர் தூது வருகிற விஷயந்தான் முக்கியமானதாகும். மேற்படி முடிவுகள் பிரிட்டிஷ் மந்திரிகளின் முடிவான முடிவுகளாயிருக்கும் பட்சத்தில் ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் இந்த அபாயமான காலத்தில் இந்தியாவுக்குப் பறந்து வரவேண்டிய அவசியமே இல்லை! இந்தியத் தலைவர்களுடன் கலந்து ஆலோசித்து முடிவான முடிவுகளைச் செய்யும் அதிகாரத்துடனே தான் அவர் வருகிறார் என்று நம்புகிறோம். இந்த நம்பிக்கையுடன் நாம் ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸுக்கு மனமார்ந்த நல்வரவு கூறுகிறோம்.

*- தலையங்கத்தின் ஒரு பகுதி*

## ஆறுமாதம் கடுங்காவல்

மதராஸ்
7.3.42

★ தாங்கள் எழுதிக்கொண்டு வந்த ''மூன்று மாதக் கடுங்காவல்'' முடியப் போகிறதென்பதைப் பார்த்தவுடன், இந்தக் கட்டுரையை நாங்கள் இன்னும் கொஞ்ச காலம் வாசிப்பதற்காக இந்த ஆசிரியருக்கு ஒரு ஆறு மாதம் கடுங்காவல் போட்டிருக்கக் கூடாதா வென்று எண்ணினேன்.

***ஆர்.வி. நாகராஜன்***
*- வட்டமேஜை*

## தெரிய வேண்டாம்

**கணவன்** : கடைக்குப் போகிறாயே



என்று, சட்டை வாங்கிக்கொண்டு வரச் சொன்னால், இவ்வளவு பெரிய சட்டையை வாங்கிக்கொண்டு வந்திருக்கிறாயே? இதை யார் போட்டுக் கொள்கிறது?

*மனைவி :* வாயை மூடுங்கள்! நீங்கள் இவ்வளவு குள்ளம் என்கிறது கடைக்காரனுக்கு முதல் கொண்டு தெரியணுமா என்ன?

## மூத்து ராமலிங்கத்தேவர்

சில பேரிடம் தூரத்திலிருக்கும் போது நமக்கு மிகுந்த மரியாதை இருக்கிறது; கிட்ட நெருங்கிப் பார்த்தால் மரியாதை போய் விடுகிறது. இன்னும் சிலரிடம்



கிட்ட நெருங்கிப் பார்த்தால்தான் அவர்களுடைய நல்ல அம்சங்கள் தெரிய வருகின்றன. ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவரைப் பற்றி வெளியிலிருந்த வரையில் என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால், ''பெரிய முரட்டுப் பேர் வழி; காங்கிரஸ் கட்டுப்பாட்டுக்கு அடங்காமல் தொல்லை கொடுக்கிறவர்'' என்பதுதான். சிறைக்குள்ளே பார்த்தபோது, அவருடைய உயரிய ஒழுக்கமும், இனிய சுபாவமும், அடக்கமான நடை உடையும் என் மனத்தைக் கவர்ந்தன. ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவர் இல்லறத்தை வெறுத்த வைராக்ய சாலி; பிடிவாதமாய் எளிய உணவுதான் உட்கொள்வார். காப்பி- தேயிலைகளின் உயர்ந்த குணங்களைப் பற்றிய பிரசாரங்களெல்லாம் அவர் விஷயத்தில் வீணேயாகும். மோரையும் நீரையுந் தவிர அவருக்கு வேறு பானம் தேவையில்லை.

தினசரிப் பத்திரிகைகளிலிருந்து யுத்த 'மாப்'புகளை வெட்டி எடுத்து வைத்துக் கொண்டு ஆராய்ச்சி செய்தவர்களில் ஸ்ரீ முத்துராமலிங்கத் தேவர் ஒருவர். எந்த நிமிஷத்தில் இங்கிலீஷ்காரன் எங்கே இருக்கிறான், ஜெர்மனிக்காரன் எங்கே இருக்கிறான் என்றெல்லாம் அவருக்குத் திட்டமாகத் தெரியும். இன்னும் அவருக்கு ஜோசியத்திலும் நம்பிக்கை உண்டு. அவரைப் போல் ஜோசியத்தில் நம்பிக்கை கொண்ட வேறு சிலரும் திருச்சி சிறையில் இருந்தார்கள். அவர்கள் எல்லாம் இரண்டு மூன்று தடவை அரசியல் கைதிகளின் விடுதலைக்குத் தேதி வைத்தார்கள். அந்தந்தத் தேதியில் என்ன நடந்தது என்று நினைக்கிறீர்கள்? - ஏன், நாங்கள்தான் ஜெயிலில் அங்குமிங்கும் நடந்தோம்! வேறு ஒன்றும் நடக்கவில்லை.

*- மூன்று மாதம் கடுங்காவல் - ரா.கி.*

## கட்டணம் மிச்சம்



ஒரு நாட்டுப் புறத்தான் ரயிலில் பக்கத்திலிருப்பவரிடம் தன்னிடம் இருப்பதில் எது ரிடர்ன் டிக்கட் என்று கேட்டான். அவர் சொன்னார். அவன் அதைத் தூக்கி வெளியில் எறிந்தான்.

*அருகில் இருந்தவர் :* ஏன் அதை எறிந்தாய்?

*நாட்டுப் புறத்தான் :* நான் திரும்பி வரப் போவதில்லை.

*அருகில் இருந்தவர் :* பின் என்னத்துக்காக ரிடர்ன் டிக்கட் வாங்கினாய்?

*நாட்டுப் புறத்தான் :* மலிவு என்று சொன்னார்கள்.

*- காலக்ஷேபம்*

## துப்பாக்கிக்குப் பதில் துடைப்பம்!

''டன்கெர்க்குக்குப் பிறகு ஏற்பட்ட ஆயுதப் பஞ்சத்தினால் நமது புதிய படைகள் துப்பாக்கிகளுக்குப் பதிலாகத் துடைப்பங்களை வைத்துக் கொண்டு பயிற்சி பெற வேண்டியதாயிற்று.''

*- ஆஸ்திரேலியா மந்திரி*

துப்பாக்கி முதலிய ஆயுதங்களைப் பெருக்க வேண்டுமென்பதை, *துடைப்பங்கள்* ஞாபகமூட்டியிருக்குமல்லவா?

*- ஆகாச வெடி*






◆ ஆர். சூடாமணியின் வலிமைவாய்ந்த பேனா விலிருந்து உதிர்ந்துள்ள நல்முத்துக்களில் மணி மகுடமாய் அமைந்து விட்டது, 'உயிர்ப்பலி'. மனத்தை அப்படியே உலுக்கிப் பிழிந்தெடுத்து விட்டன அச் சிறுகதையின் கடைசி வரிகள்... அப்பப்பா...!

சென்னை - 80, கே. என். ஸ்ரீநிவாஸ்.

◆ பெருவாரியான மக்கள் கலந்து கொள்ளும் ஒரு புனித நிகழ்ச்சியில் பெருவாரியான மக்களின் அன்பைப் பெற்ற ஒரு தலைவர் எப்படி கலந்து கொள்ளாமல் இருக்க முடியும்? ''மகாமக விழா வில் தமிழக போலீஸாரும் V.I.P. யினரும் தங்கள் கடமையைத் திறம்படவே ஆற்றினர். முதல்வர் ஜெயலலிதா குளிக்க ஒதுக்கப்பட் டிருந்தது மகாமகக் குளத்தின் மேற்குப் பகுதியில் ஒரு சிறிய இடமே. துரதிருஷ்டவசமான, எதிர் பாராத இந்த சம்பவத்துக்கு யாரையும் தூற்றுவது தேவையற்றது.

பெங்களூர், இ. வாசு.

◆ 'மகாமகம் விபத்து' பற்றிய தலையங்கம் மிகவும் ஆய்ந்து எழுதப்பட்ட ஒன்று. முதல்வ ருக்கும், அதிகாரிகளுக்கும் இடையே உள்ள செயல்பாட்டு உறவு முறையைக் கேள்விக்குறி யாக்கியுள்ள விதம் நாட்டின் நலன் மேல் அக்கறை கொண்டுள்ள எவரையும் சிந்திக்கத் தூண்டியிருக்கும்.

கரடிபாவி, பூ. பெருமாள்சாமி.

◆ 'இ. கல்யாணி' எழுதிய பட்ஜெட் சிரிப்பில் 'பட்ஜெட்' என்ற வார்த்தை விட்டுப் போய் விட்டதே! தங்களது போட்டி நிபந்தனைப்படி ஜோக்கில் 'பட்ஜெட்' என்ற சொல் இடம்பெற வேண்டும் அல்லவா?

ஹைதராபாத், கௌசல்யா ஸ்ரீராம்.

◆ நெடுநாட்களுக்குப் பிறகு உமது இதழில் 'தமயந்தி'யின் சிறுகதையைப் படித்த போது, ஆருயிர்த் தோழியுடன் கருத்துப் பகிர்ந்து கொள் வது போல இருந்தது.

ஆரூர், என். சிவகாமி.

◆ விற்பனை மந்தமாக இருந்தாலும் வித்தி யாசமான அலங்காரங்களைச் செய்து வாடிக்கை யாளர்களைக் கவரும் வியாபாரிகளுக்கு நடுவே, இருட்டுக் கடையில் அல்வா விற்று, வாடிக்கை யாளர்களைப் பெருக்கும் பிஜ்லி சிங் உண்மை யிலேயே அதிசய மனிதர்தான்!

கொங்கணாபுரம், வே. செந்தில்குமார்.

◆ சுமார் ஒன்றரை வருடங்களாகப் பல்கலைக் கழக மானியக் குழுவின் அங்கீகாரம் பெறாம லேயே மனோன்மணீயம் சுந்தரனார் பல்கலைக் கழகம் இயங்கி வரும் விந்தையை வெளிப் படுத்திய ஒரே இதழ் 'கல்கி'தான். இவ்வளவு நாட்களாக இவ்வுண்மை புதைந்திருந்தது, ஆச்சரி யத்தை ஏற்படுத்துகிறது. அரசின் உறக்கம் கலையுமா?

கும்பகோணம், எஸ். மங்களம்.

◆ 'ஒளிமயமான தமிழகத்தை உருவாக்கப் பாடுபடுவேன்' என்று கூறியிருக்கும் புதிய அமைச்சர் நாகூர் மீரான் பாராட்டுக்குரியவர். அவர் பாடுபட ஆரம்பிப்பதற்குள், நம் முதல்வர் அவரை நீக்கி விட்டு வேறு ஒருவரைப் புதிதாக நியமிக்காமல் இருக்க இறைவனை வேண்டிக் கொள்கிறேன்.

புதுவண்டிப்பாளையம், த. ரவீந்திரன்.

◆ 'அடிக்கடி நடக்கும் கோஷ்டிச் சண்டைகள்' என்ற தலைப்பில் சில செய்திகள் வெளியிட் டுள்ளீர்கள். இவை உங்களது கருத்தாக இல்லா விடினும், பேட்டிகளில் வெளியாகியுள்ள தக வல்கள் பல உண்மைக்குப் புறம்பானவை. சத்தி ரிய நாடார் இன மக்களின் மனங்களைப் புண் படுத்துகிறவை.

சென்னை, ஜூலியன் நாடார்,
ஆசிரியர், இந்திய நாடார் முரசு.

◆ இரண்டு கோஷ்டிகளின் அடாத செயலை, இரண்டு இனத்தாரின் மோதலாக மாற்றி நிரந்தர மாகவே அமைதிக்குக் கேடு விளைவிக்க நினைத்து விட்டீர்களா? இரண்டு கோஷ்டிகளின் சாதியையும் வெளிப்படையாகக் கூறினால், அது சாதிச் சண்டைக்கு வழிவகுத்துக் கொடுத்தது போல ஆகாதா? தேவையேயில்லாமல், ஒரு இனத்தைச் சார்ந்த பத்திரிகை அதிபர் என்றும் ஒரு இனத்தைச் சார்ந்தவர்களைச் சுற்றிலும் வைத் திருப்பவரென்று முதலமைச்சரையும் பிரகடனப் படுத்துவதின் மூலம், வலியச் சென்று அந்த இரண்டு பெரியவர்களையும் மோத விடுவ தாகாதா?

சிந்தியுங்கள்.

சென்னை, ஏ. எம். பால்ராஜ்,
ஆசிரியர்,
வணிக ஒற்றுமை.

*(நெல்லையில் நாங்கள் சந்தித்த மக்களில் அநேகமாக அனைவருமே இந்த கோஷ்டிச் சண்டையால் தங்கள் அன்றாட வாழ்க்கையில் பயமும் நிம்மதியின்மையும் நிலவுவதாகக் கூறி னர். அமைதி திரும்பி, மக்களின் சகஜ வாழ் வுக்கு வழி ஏற்பட வேண்டும் என்பது மட்டுமே எங்கள் நோக்கம். யாருடைய மனத்தையும் நோகச் செய்வது அல்ல. - ஆசிரியர்.)*

◆ கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகப் பணிமனை தாமிரபரணி ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. கழிவுநீர் நேரிடையாக ஆற்று நீரில் கலப்பதைத் தவிர்க்கும் விதமாகக் கழிவு நீரைச் சுத்திகரிப்பதற்காக ''மாசுக் கட்டுப்பாடு வாரியத்தின்'' அங்கீகரிக்கப்பட்ட ''இரசாயன சுத்திகரிப்பு நிலையம்'' ஒன்று இயங்கிக் கொண் டிருக்கிறது. கழிவுநீர் இந்த நிலையத்தில் சுத்தி கரிக்கப்பட்டு பாதிப்பு இல்லாத கழிவுநீர் மட் டுமே ஆற்று நீருடன் கலக்கிறது.

திருநெல்வேலி,
நிர்வாக இயக்குனர்,
கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகம்.

**வட்டமேஜை**

ர்நாடக இசைக்கு அஞ்சும்

# தமிழ்நாட்டு இளைஞர்கள்!

கர்நாடக இசை என்றாலே இன்று பெரும்பாலான இளைஞர்கள் பயந்து ஒதுங்குகிறார்கள். காரணம் கேட்டால், ''போர்'' என்பார்கள், அல்லது, ''அதெல்லாம் நமக்குப் புரியாது, ஸார்'' என்பார்கள்!

வித்வான்கள் காரணமோ, அல்லது விமர்சகர்கள்தான் காரணமோ, எப்படியோ ஒரு தேவையற்ற பயம் இளைஞர்கள் உள்ளத்தில் ஏற்பட்டுப் போனது.

சங்கீதத்தை அனுபவிக்க அதன் நுணுக்கங்கள் தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியமே இல்லை. இசை நம் இதயத்தைக் குளிர்விக்கிறதா, மனசு இலேசாகிறதா, ஓர் ஆனந்தம் கிடைக்கிறதா என்பதுதான் முக்கியம். சினிமா சங்கீதமோ அல்லது பாப் இசையோ கேட்கும் இளைஞர்கள் அதன் நுணுக்கங்களையா ஆராய்கிறார்கள்? இல்லையே! அவ்வாறே கர்நாடக இசையையும் கேட்டு ஆனந்திக்கலாம்.

அனுபவித்துப் பழகிக் கொண்டே வந்தால் நாளடைவில் தானாகவே ஆர்வம் உண்டாகி, 'இது என்ன ராகம்? இந்தக் கீர்த்தனைக்கு என்ன அர்த்தம்?' என்று தெரிந்து கொள்ளும் ஆசை ஏற்படும். மாறாக, 'கண்ட ஜாதி திரிபுட தாளத்தில் அரை இடம் தள்ளி எடுப்பு' என்று ஆரம்பத்திலேயே பயமுறுத்தினால் இளைஞர்கள் நழுவத்தான் செய்வார்கள்!

இளைஞர்கள் கர்நாடக இசையின் சுகானுபவத்தைப் பெற, ஆடியோ டேப்புகள் இன்று பெருமளவுக்கு உதவுகின்றன. இந்தியா டுடே பத்திரிகை நிறுவனம் பல கலை மேதைகளின் இசை கேஸட்டுகளை வெளியிட்டுள்ளது. ''மியூஸிக் டுடே'' என்ற தலைப்பில் இவர்களது சமீபத்திய தயாரிப்பு, தியாகையர் கிருதிகள். நாலு கேஸட்டுகள் அடங்கிய இந்த ஸெட்டில் ஒவ்வொரு டேப்பிலும் ஒருபுறம் வாய்ப் பாட்டு; மறுபுறம் வாத்திய இசை. மகாராஜபுரம் சந்தானம், டி. என். கிருஷ்ணன், பாலமுரளிகிருஷ்ணா, துரைசாமி ஐயங்கார் ஆகியோர் இசை வெள்ளம் பெருக்கெடுக்கச் செய்கிறார்கள்.

'இசையின் நுணுக்கங்கள் இந்த வித்வான்களுக்குத்தான் தெரிந்திருக்க வேண்டுமே தவிர, நமக்கு அல்ல' என்ற எண்ணத்


பாலமுரளி கிருஷ்ணா


மகாராஜபுரம் சந்தானம்


டி. என். கிருஷ்ணன்


வீணை துரைசாமி ஐயங்கார்



"என்னங்க இது! பேச ஆரம்பிச்ச நம்ம தலைவர் திடீர்னு கூட்டத்தை எண்ண ஆரம்பிச்சுட்டார்?"

"என் பேச்சைக் கேட்க வந்திருக்கும் இந்த கூட்டத்தை எண்ணி எண்ணி மகிழ்ச்சி அடைகிறேன்னு அவர் சொன்னதைக் கவனிக்கலையா நீங்க?"

- வெ. ராஜாராமன்

துடன் இந்த டேப்களைக் கேட்டு ரசிக்க ஆரம்பித்தால், பிறகு படிப்படியாகக் 'கண்ணால் காண முடியாத ஒரு ராகத்துக்கு எப்படி அழகிய, அற்புதமான வடிவம் உள்ளது; அந்த வடிவத்தை எப்படி காதுகளால் கேட்டு உணர முடிகிறது!' என்று வியந்து போகலாம். அப்புறம் கீர்த்தனையின் அர்த்தத்தையும் தெரிந்து கொண்டோமானால் ராக வடிவமானது அந்த அர்த்த பாவத்துக்கு எப்படி துணை நிற்கிறது என்பதையும் அறிந்து அதிசயிக்கலாம். அதிலிருந்து தியாகையரின் மேதாவிலாசத்தையும் புரிந்து கொள்ளலாம்.

உதாரணமாக 'க்ஷீரசாகர சயனா' என்ற கீர்த்தனை தேவகாந்தாரி ராகத்தில் அமைந்தது. அதை பாலமுரளி கிருஷ்ணா பாடும் போது பாற்கடலில் பள்ளி கொண்ட பரமனின் கம்பீரத் தோற்றத்தையும், அலை கடலின் ஆர்ப்பரிப்பையும், கரையோரச் சிற்றலைகளின் மிருதுவான சலசலப்பையும் மாறி மாறி ராக வடிவிலேயே கண்டு (கேட்டு) ரசிக்கலாம்.

**ம**ருத்துவத் துறையில் சமீபத்தில் நடந்த ஓர் ஆராய்ச்சியின்படி, டென்ஷன் காரணமாக ஏற்படும் பல உடல் கோளாறுகளை இசை மூலம் குணப்படுத்துவதில் மற்ற எல்லாவித இசைகளையும் விடக் கர்நாடக இசையே அதிகப் பலன் தந்தது! தகவல் தந்தவர் : டாக்டர் லலிதா காமேசுவரன். "மனச் சாந்திக்கு இறை உணர்வுடன் கூடிய கர்நாடக இசைக்கு இணையானது வேறு எதுவுமில்லை" என்றார் அவர்.

சந்தேகமிருந்தால் மியூஸிக் டுடே தயாரிப்பில் "தியாகராஜா - மாஸ்டர் பீஸஸ்" டேப்களை வாங்கிக் கேட்டுப் பார்க்கலாமே!

- குட்டி கிருஷ்ணன்

# ஒரு மணி நேரத்தில் இரு 'சூப்பர் ஹிட்' பாடல்கள்!



● பாலையா

பாலையாவை எப்படிச் சமாளித்தேன் என்றால், மனம் விட்டுப் பேசியதன் மூலம்தான். பல சந்தர்ப்பங்களில் இந்த அணுகுமுறை பலன் தந்திருப்பதை உணர்ந்தவன் நான். ''பாலையா ஸார், இதோ பாருங்க; என் படம் முழுக்க ஆளியாறு அணைக்கட்டுப் பகுதியில் எடுக்க உத்தேசித்திருக்கிறேன். ரேஸ் தினங்களில் சென்னை வந்து திரும்பறது என்பது சாத்தியப்படாது. என் விஷயத்தில் மட்டுமாவது நீங்க உங்க பழக்கத்தை மாற்றிக்கிட்டா, அனாவசிய பிரச்னைகள் எழுவதைத் தவிர்க்கலாம். உங்க நடிப்பாற்றலைப் பயன்படுத்திக்காம விடவும் எனக்கு மனசில்லை. என்ன சொல்றீங்க?''

பாலையா சற்று யோசித்தார். பிறகு, ''என்னால் உங்களுக்கு எந்தப் பிரச்னையும் இருக்காது. ரேஸ் தினம் என்றால் கூட ஷூட்டிங்கைத் தவற விட மாட்டேன், சரி தானே?'' என்றார். நான் ஏக மகிழ்ச்சியுடன் அவர் கையை என் இரு கரங்களாலும் பற்றிக் குலுக்கி விட்டுத் திரும்பினேன்.

பாலையா தாம் கொடுத்த வாக்குறுதியைக் கடைசி வரை காப்பாற்றித் தந்தார். அவர், தமது ஒரு தீவிரப் பற்றுதலை, பழக்கத்தை எனக்காக விட்டுக் கொடுத்துப் பூரண ஒத்துழைப்பு அளித்தது, அவர் நடிப்பின் மீது மட்டுமின்றி, அவரிடமும் எனக்கு மரியாதையை அதிகரிக்கச் செய்தது.

இந்தி பட உலகின் இசை இரட்டையர்கள் சங்கர் - ஜெய்கிஷன் ஆகியோரில் எப்படி ஜெய்கிஷனிடம் எனக்கு நெருக்கம் அதிகமோ, அதே போல், தமிழ்ப் பட உலகின் இசை இரட்டையர் விசுவநாதன் - ராமமூர்த்தி ஆகியோரில் எனக்கு மிகவும் நெருக்கமானவர் விசுவநாதன்தான். 'காதலிக்க நேரமில்லை' படத்துக்கு இருவருமே மிகவும் உற்சாகமாய்ப் பணியாற்றினார்கள். அவர்கள் டியூன்கள் அமைக்கும்போதே, ஒவ்வொரு பாடலும் ரசிகர்களிடையே பிரமாதமான வரவேற்பைப் பெறப் போகிறது என்பதை என்னால் உணர முடிந்தது.

ஒருநாள், கண்ணதாசன், விசுவநாதன், நான் ஆகிய மூவரும் உட்கார்ந்து டியூன்கள் அமைப்பது பற்றிப் பொதுப் படையாகப் பேசிக் கொண்டிருந்தோம். திடீரென்று கண்ணதாசன், உபயோகமாகத்தான் பேசிக் கொண்டிருக்கிறோம் என்றாலும், 'எடுத்துக் கொண்ட பணிக்குச் சம்பந்தமில்லாத பேச்சு' என்று உணர்ந்ததாலோ என்னவோ, ''விஸ்வநாதன்! வேலை வேணும்! சீக்கிரம் டியூன் போடு!'' என்றார்.

விஸ்வநாதனும் இசை தொடர்பான பேச்சிலிருந்து விடுபட்டு, இசை அமைப்பில் கவனம் செலுத்தினார். டியூன் 'ஓ.கே.' ஆனதும், அந்த டியூனுக்குக் கண்ணதாசன் எழுதிய முதல் அடி : ''விஸ்வநாதன் வேலை வேணும்!''

எல்லாரும் சிரித்து விட்டோம். சிரிப்பு அடங்கியதும் கண்ணதாசன் என்னைப் பார்த்து, ''ஏன், ஸ்ரீ நான் பாட்டுக்கு விஸ்வநாதனிடம் தமாஷாகச் சொன்னதையே முதல் அடியாய் எழுதிட்டேனே, அந்த அப்பா கேரக்டருக்கு என்ன பெயர்?'' என்று கேட்டார்.

''நான் திடுக்கிட்டேன். அப்பா கேரக்டருக்கு நான் பெயரே வைக்கவில்லை என்பது அப்போதுதான் என் நினைவுக்கு வந்தது! அந்தக் கணமே பாலையா கேரக்டருக்கு ''விசுவநாதன்'' என்பதே பெயர் எனத் தீர்மானித்து, ''நீங்கதான் நாமகரணம் செய்துட்டீங்களே, அதையே வைச்சுக்குவோம்!'' என்றேன்.

பாடல்களைப் பதிவு செய்து கொண்டு, இட்டமிட்டபடியே எல்லோரும் ஆளியாறு அணைக்கட்டுக்குப் போய்ச் சேர்ந்தோம். ரம்யமான சூழ்நிலை நடிக நடிகையருக்கும் யூனிட்டில் அனைவருக்கும் உற்சாகம் ஊட்ட, படப்பிடிப்பும் ஆரம்பமாகி வேகமாக வளர்ந்தது.

திடீரென்று எனக்கு ஓர் எண்ணம்.

**டைரக்டர் ஸ்ரீதர்**

படத்திலே மேலும் இரு பாடல்களைப் புகுத்த வேண்டும் என்பதுதான்! சென்னைக்கு ஃபோன் போட்டு விசுவநாதனிடம் சொன்னால், கண்ணதாசனிடம் கேட்டுக் கொண்டால், பாடல் பதிவு செய்து அனுப்பி விடுவார்கள். ஆனால் 'டியூன்' எனக்குத் திருப்திகரமாய் அமைய வேண்டுமே? நான் சென்னை சென்று திரும்புவது எனில் ஷூட்டிங் தடைப்படும். என்ன செய்வது?

ஃபோனில் விசுவநாதனையும் கண்ணதாசனையும் தனித்தனியே அழைத்தேன். ''இதுவரை நீங்க போட்ட டியூன், எழுதின பாடல் எல்லாம் பிரமாதமாய்த்தான் இருக்கிறது. ஆனாலும் இந்த அற்புதமான சூழ்நிலையின் மத்தியில் நீங்க மூவரும் இருந்து, டியூன் போட்டுப் பாட்டு எழுதினால் அது



● காதலிக்க நேரமில்லை படத்தில் நடித்த ராஜ்ஸ்ரீ
- படம் உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்

சூப்பராக அமையும் என்று எனக்குத் தோன்றுகிறது'' என்று கூறி, ஒத்துழைப்பை வேண்டினேன். ஒரே ஒரு நாள் எனக்கு ஒதுக்குமாறு கேட்டுக் கொண்டேன். என் வேண்டுகோளை ஏற்று அவர்களும் வந்து விட்டார்கள். இயற்கை எழிலை ரசித்துப் பார்த்தார்கள்.

விஸ்வநாதன் - ராமமூர்த்தி, கண்ணதாசன், நான் நால்வரும் அமர்ந்திருக்க, எம். எஸ். வி. ஒரு டியூன் போட்டார். எனக்கு ரொம்பப் பிடித்துப் போனது. உடனே கண்ணதாசன் மெட்டுக்குப் பாட்டு எழுதினார். அதுவும் 'ஓ.கே.'! அடுத்து மறுபடி ஒரு டியூன் ; மேலும் ஒரு பாடல் - 'ஓ.கே.' ஆயின.

ஒரு மணி நேரத்துக்குள் தயாரான அந்த இரு மெட்டுக்களும் பாடல்களும் என்ன தெரியுமா? சொன்னால் நம்புவது கஷ்டமாயிருக்கும்!

1. நாளாம், நாளாம் திருநாளாம்...

2. நெஞ்சத்தை அள்ளிக் கொஞ்சம் தா, தா, தா! நீரோட்டம் போல இங்கு வா, வா, வா!

இரண்டும் - உங்களுக்கே தெரியும் - சூப்பர் ஹிட் ஆனவை.

**'கா**தலிக்க நேரமில்லை' படத்தின் பெரும் பகுதி ஆளியாறு அணைக்கட்டில்தான் எடுக்கப்பட்டது என்றாலும் மெரீனா கடற்கரையிலும் ஒருசில காட்சிகளைப் படம் பிடித்தோம். மெரீனாவையொட்டி ராணி மேரி கல்லூரி, மாநிலக் கல்லூரி ஆகியன அமைந்திருப்பதால், மெரீனா ஷூட்டிங் என்றால் மாணவர்கள் வேடிக்கை பார்க்க வருவதையும் கிண்டல் செய்து கமெண்ட் அடிப்பதையும் தவிர்க்கவே முடியாது.

ஷூட்டிங்கின் போது, ஒவ்வொரு காட்சியிலும் நான் என்ன எதிர்பார்க்கிறேன் என்பதை முதலில் நானே நடித்துக் காட்டுவேன். பிறகு நடிக நடிகையர் செய்து காட்டுவார்கள். அப்போது நான் எதிர்பார்க்கிற மூவ்மெண்ட் கிடைக்காவிட்டால் அவர்களைத் தொட்டு அல்லது பிடித்து, உடல் அல்லது கரத்தின் அசைவு எப்படி அமைய வேண்டும் என்பதைக் கற்றுத் தருவது இன்றியமையாததாகும். இந்தச் சமயத்தில் வேடிக்கை பார்க்கும் கல்லூரி மாணவர்களும் மாணவியரும் என்னைக் கிண்டலடிப்பதில் உச்சகட்டத்துக்கே போய் விடுவார்கள்! மாணவர் உலகில் இதெல்லாம் சகஜம் என்பதால் நான் இதையெல்லாம் பெரிதுபடுத்துவதில்லை; கோபப்படுவதும் இல்லை. அவர்கள் கலாட்டாவையெல்லாம் லட்சியம் செய்யாமல் காரியத்தில் கண்ணாயிருப்பேன்.

ஆனால் 'காதலிக்க நேரமில்லை' படத்தை மெரீனாவில் எடுத்த போது மட்டும் நான் ரொம்பத்தான் திணறிப் போனேன்! நடிகையரைத் தொட்டு, நடிப்பு - நடன அசைவுகளைச் சொல்லித் தந்த போது எழுந்த கிண்டலான 'கமெண்ட்ஸ்' எனக்கு ரொம்ப வெட்கத்தையும் கூச்சத்தையும் உண்டாக்கின. அதற்குக் காரணம், பார்வையாளராக நின்ற மாணவ - மாணவியரிடையே, கூட்டத்தில் ஒருத்தியாக இருந்த ஒரு பெண்தான்; ஒரு மாணவிதான். இந்த ஒருத்தி மட்டும் ஏன் என்னிடம் இவ்வளவு பெரிய மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும்? அவள் யார்?

விடை அடுத்த வாரம்!





● நரசிம்மன்

# வீதிக்குப்போன டிரை கிளீனிங் வீட்டுக்கே வருகிறது!

தெருவுக்கு இரண்டு டிரை கிளீனிங் கடைகள் இருந்த காலம் மாறிவிட்டது. சென்னை நகரின் பிரபல உலர் சலவை நிறுவனங்கள் கூட தங்கள் கிளைகள் பலவற்றை இழுத்து மூடிவிட்டன. இந்த நிலை உருவாகக் காரணம் என்ன....?

''டிரை கிளீனிங் தேவைப்படாத செயற்கை இழைத் துணிகள் பெருகிவிட்டதுதான் காரணம்'' என்கிறார் முன்பு தமது உலர் சலவைத் தொழிலின் பத்து கிளைகளைச் சென்னையில் நடத்தி வந்த ஒருவர். வியாபாரம் நொடித்ததால் தற்போது இரண்டு கிளைகளை மட்டுமே இயக்கிக் கொண்டு ரியல் எஸ்டேட்டில் இறங்கியுள்ளார். தமது பெயரை வெளியிட விரும்பாத அந்த நபர் மேலும் கூறுகிறார்:

''டிரை கிளீனிங்குக்குக் கட்டணம் அதிகம். இப்போது பெரிய பெரிய துணிகளைக் கூட வீட்டிலேயே சலவை செய்ய வசதியாக வாஷிங் மெஷின்கள் உள்ளன; வகை வகையான துணிகளுக்கு ஏற்ற சோப்புத் தூள், கட்டி, வில்லை, சொட்டு நீலம்... எல்லாம் கிடைக்கின்றன. உலர்ந்த துணிகளை உடனுக்குடன் இஸ்திரி போட வீட்டு வாசலிலேயே நடமாடும் இஸ்திரி நிலையம் இருக்கிறது. எனவே முன்பு போல் யாரும் உலர் சலவைக்குத் துணிகளைத் தருவதில்லை.

''பெரிய பெரிய கம்பளிகளையும் கோட்-சூட்களையும்தான் வீட்டில் துவைக்க முடியாது. ஆனால் சென்னையில் இவற்றைப் பயன் படுத்துவோர் அரிது.....

''உலர் சலவை செய்வதற்கு mineral turpentine பயன்படுத்த வேண்டும். இதைத் துணிகளில் இட்டு இயந்திரத்தில் சலவை செய்வோம். ஆனால் போலிகள் பலர் தோன்றி உலர் சலவை என்ற பெயரில் நனை சலவையே செய்ய ஆரம்பித்தார்கள். இதனால் துணிகள் பாழானதோடு தரமான உலர் சலவையாளர் பெயரும் பாழாகிப் போனது!..... இருந்தாலும், எங்கள் மெய்யான தரம் அறிந்த வாடிக்கையாளர்கள் இன்னமும் எங்களைத் தேடி வருகிறார்கள்'' என்று முடித்தார் மனம் நொந்து போன அந்த வர்த்தகர்.

''வீட்டிலேயே டிரை கிளீனிங் செய்ய முடியும்'' என்று கூறுபவர் நரசிம்மன். Quickeez என்ற பெயரில் ஒரு கிரீமைத் தயாரித்துள்ள இவர், அதைக் கொண்டு சிறந்த உலர் சலவை செய்யலாம் என்கிறார்.

விஞ்ஞான பட்டதாரியான நரசிம்மன், பல ஆண்டுகள் சோதனை செய்து, அமிலம், வாஷிங் சோடா, காஸ்டிக் சோடா போன்ற எதையுமே பயன்படுத்தாமல், துணிகளின் தரத்தையும் பளபளப்பையும் பாதிக்காத Petro chemical fatty alcohol ஐக் கொண்டு quickeez ஐத் தயாரித்துள்ளார்.

''1984 இல் இத்தொழிலை ஆரம்பித்தேன். இத் தயாரிப்பை ஏற்றுமதி செய்ய வேண்டும் என்பது என் லட்சியம்'' என்கிறார் நரசிம்மன்.

- கீதா மோஹன்

படம் : யோகா

# மன ஊஞ்சல்

மூன்று நாட்களாய் எதிர்பார்த்துக் கொண்டிருந்த தபால் வந்து சேர்ந்தது. இருபது நாட்கள் டெல்லியில் டிரெயினிங். நான்காயிரத்துச் சொச்ச தொழிலாளர்களுள், தேர்ந்தெடுக்கப்பட்ட பன்னிரண்டு நபர்களில் பிரபுவும் ஒருவன்.

நவீன 'மானேஜ்மெண்ட் டெக்னிக்ஸ்' பற்றிய பயிற்சி.

இந்தப் பயிற்சிக்காக ஒவ்வொருவருக்கும் சுமார் எழுபது எண்பதாயிரம் ரூபாயைக் கம்பெனி செலவு செய்கிறது. 'நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். செலவழித்த ஒவ்வொரு பைசாவும் உபயோகமே என்று என்னைத் தேர்வு செய்த மேலதிகாரி நினைக்குமாறு வந்தபின் பணியாற்ற வேண்டும்' எனப் பிரபு நினைத்தான்.

கடிதத்தை மீண்டும் ஒருமுறை படித்தான். புதுதில்லியில் 'குதுரப்' ஓட்டலில் கான்பரன்ஸ் ஹாலில்தான் பயிற்சி. ஏழாம் தேதி துவங்கி இருபத்தி ஆறு முடிகிறது. நாளொன்றுக்குத் தங்கும் வசதிக்காக மட்டும் ஒவ்வொருவருக்கும் ரூபாய் நானூறு கம்பெனி கொடுக்கும்.

லெட்டரை எடுத்துக் கொண்டு அம்மாவிடம் சென்றான். அவனுக்கு இன்னும் திருமணமாகவில்லை. மத்திய சர்க்கார் கம்பெனியில் நல்ல வேலை. உடன் பிறப்பாக ஓர் அக்காள் மட்டும். அவளுக்கு மணமாகி ஏழு, எட்டு வருடங்களாகிறது. மாயவரத்தில் இருக்கிறாள். பிரபு, பெற்றோருக்குக் காலம் தாழ்ந்து பிறந்த பிள்ளை. தந்தையாருக்கு வயது எண்பதுக்கு மேல். படுத்தபடிதான் எல்லாம். நாடி ஓடிக் கொண்டிருக்கிறது, ஞாபகம் பிசகவில்லை என்பது தவிர வேறு ஒரு அசைவும் இல்லை. வயது அதிகமாகி விட்டதால் சும்மா வேப்பெண்ணெய் தடவுவது தவிர, வைத்தியத்தில் அதிகம் முயற்சிக்கவில்லை.....

அம்மாவிடம் விஷயத்தைச் சொன்னதும்,

'நீ போனால் நான் என்னடா செய்வேன்? ஒண்டிக்கட்டையாய்' என்று கேள்விக்குறி பார்வை பார்த்தாள்.

சிறிது நேரம் மௌனம் நிலவியது.

''நடுவில வந்துட்டுப் போக முடியுமாடா?''

''ஏம்மா.... டில்லி போக இரண்டு ராத்திரி ஒரு பகலாயிடும். அங்க தொடர்ச்சியா பயிற்சி இருக்கும். ஞாயிற்றுக் கிழமை ஒரு நாள்ல வந்துட்டுப் போக முடியுமா? இதை எத்தனைவாட்டிதான் சொல்றது?'' அவன் குரல் சற்று உயர்ந்துதான் விட்டது.

''ஏண்டா கோச்சுக்கற...? இதைப்பத்தி கேட்டாலே உனக்குக் கோபம் வருது.'' பாக்யத்தம்மாள் குரல் உடைந்துவிட்டது. கண்களில் நீர் கோர்த்துக் கொண்டது.

''ஏம்மா எனக்கு மட்டும் உன்னையும், அப்பாவையும் விட்டுவிட்டுப் போய் இருக்கணும்ன்னு ஆசையாம்மா? கஷ்டப்பட்டுப் படிச்சு, திறமையினால் தேர்ந்தெடுக்கப்பட்டு வாழ்க்கையில ஒரு சந்தர்ப்பம் இடைச்சிருக்கு. போகாம இருக்கவாம்மா? இந்த டிரெயினிங் முடிந்ததும்



என்னை செக்ஷன் மாற்றி நல்ல உசந்த வேலை கொடுத்தாங்கன்னா உனக்கும் சந்தோஷம் தானேம்மா.''

அவன் முகத்தையே கலங்கிய கண்களுடன் நம்பிக்கையோடு பார்த்துக் கொண்டிருந்த பாக்யத்தம்மாளுக்கு அவன் சொல்லுவதும் வாஸ்தவம் என்றே பட்டது.

''சரிப்பா... நல்லபடியா போய்ட்டு வா... கடவுள்விட்டபடி பிழைக்கக் கிடப்போம். என்ன ஆகிடப் போறது. பல்லைக் கடிச்சிக்கிட்டு இருந்திடுறேன்.''

**கா**ய்கறி தவிர அம்மாவுக்கு மற்றதெல்லாம் ஒரு மாதத்துக்கு வாங்கிக் கொடுத்து விட்டான். வியாழன் காலை அனைத்தும் தயார். வெள்ளி இரவு டிரெயின். தமிழ்நாடு எக்ஸ்பிரஸ். ஞாயிறு காலை டில்லி போய்விடும். திங்கள் முதல் டிரெயினிங்.

சுமார், ஒன்பதுமணி வாக்கில் டிபன் சாப்பிட்டுவிட்டு கிளம்பி 'ராம்மோகன் சார்' வீட்டுக்குப் போனான். டெல்லியில் அவனுக்கு ஏதும் பொருட்கள் வாங்க உதவுவதற்காக 'ராம்மோகன் சார்' டெல்லியில் இருக்கும் அவர் அண்ணனுக்கு ஒரு லெட்டர் தருவதாகச் சொல்லியிருந்தார்.

லெட்டரை வாங்கிக் கொண்டு, தன் வீட்டுத் தெரு முனை திரும்பும்போது அவனுக்கு ஏதோ விசித்திரமாகப்பட்டது. தன் வீட்டு வாசலில் பக்கத்துவீட்டு நாயுடு அம்மாவும் ஈர்க்குச்சி மாமியும் நின்று கொண்டிருப்பது போலிருந்தது. வீட்டிற்கு வந்த பின்புதான் இன்னும் சிலரும் உள்ளே நிற்பது தெரிந்தது. இவனைப் பார்த்ததும் வேகமாக விலகி வழிவிட்டது இவனுக்குச் சிறிது பதைபதைப்பாக இருந்தது. சிலர் அழும் குரலும் ஊதுபத்தி வாசனையும்.... மேலும் ஹாலில் நாலைந்து பேர். ரூமில் தந்தை கட்டிலருகே அம்மா அமர்ந்திருந்தாள். தலை கட்டிலில் அப்பாவின் காலருகில் புதைந்திருந்தது.

புரிந்துவிட்டது! ஐந்து வருடமாக இழுத்துக் கொண்டிருந்த ஜீவன் தனக்கு டிரெயினிங் வாய்ப்புக் கிடைத்த சமயத்தில் போய் விட்டதே என்றுதான் அவனுக்கு முதலில் தோன்றியது.

டிரெயினிங் போகவே முடியாதா? நாளை இரவல்லவா கிளம்ப வேண்டும். அதற்குள் எல்லாம் முடிக்க முடியுமா? அவன் மனம் வேகமாகக் கணக்குப் போட்டது. நல்ல வேளை. நாளை

## சோம. வள்ளியப்பன்

போகாமல் இன்றே போனதே.... *ச்சீ...* அப்பா இறந்தால் ஒரு மகன் இப்படியா நினைப்பது? என்று எதிர்க் கேள்வியும் அதுவே கேட்டு நல்லவனாக்கப் பார்த்தது.

மெதுவாக அம்மா பக்கத்தில் அமர்ந்தான். இதமாக, அழுத்தமாகத் தோளைத் தொட்டான். நிமிர்ந்து பார்த்தாள்.

ஐந்து வருடமாகவே தெரிந்ததுதானென்றாலும் இழப்பை எதிர்கொள்ள முடியாது தாயார் தவிப்பதை உணர்ந்தான். முந்தானையால் வாய்பொத்தி அழுத அம்மாவைப் பார்த்தான். என்ன சொல்ல முடியும்?

அம்மாவுடன் பேச வேண்டும். இன்று மாலையே எடுத்துவிடலாம். அக்கா சரோஜா மாயவரத்திலிருந்தும், தாய்மாமன் சித்தூரிலிருந்தும் வந்தால் போதும். வேறு ஒன்றும் சொந்தமில்லை. நாளை இரவு தானே டிரெயின். அம்மாவை வேண்டுமானால் அக்கா சரோஜாவுடன் அனுப்பி வைக்கலாம். ஒரு மாறுதலாகவும் இருக்கும், துணையாகவும் இருக்கும்.

ஒத்துக் கொள்ள வேண்டுமே. பின் என்ன செய்ய? அம்மாவால் தனியாகவா இருக்க முடியும்? பிரபுவுக்குள் பலதரப்பட்ட எண்ணங்கள் ஓடின.....

கிசுகிசுப்பான குரலில் அம்மாவின்





''எல்லாப் பத்திரிகையிலும் ஏராள மான ஜோக்ஸ் எழுதித் தள்ளுறீங்களே, உங்க குறிக்கோள் என்ன?''

''சாகறதுக்குள்ளே ஒரே ஒரு ஜோக்காவது சொந்தக் கற்பனையில எழுதணும்கிறதுதான்!''

- நீலமேகம்



''என்னங்க.. ஒரு மாசமாகுது நம்ம பையனைக் காணலியே... பேப்பர்ல விளம்பரம் கொடுக்கப்படாதா?''

''அவன் எங்கேடி பேப்பர் படிக்கப் போறான்? வேணும்னா சினிமா தியேட்டரில ஸ்லைடு போட்டுப் பார்க்கலாம்...''

- ஆர். வசந்தகுமார்

''சார்! என்னை இந்த மாதிரி போட்டு அடிக்கிறீங்களே, எங்க அப்பாவை அடிக்க உங்களுக்குத் தைரியம் இருக்கா...?''

''நான் ஏன்டா உங்க அப்பாவை அடிக்கணும்?''

''அவர்தானே வீட்டுக் கணக்குகளைத் தப்புத் தப்பா போட்டுக் கொடுக்கறது!''

- இ. ராஜு



காதருகே எட்டிக் கேட்டான். ''சரோஜா, வெங்கு மாமா ரெண்டு பேருக்கும் சொல்லிடவா. சாயந்திரம் எடுத்திடலாமில்லையா?'' கேட்டதில் சற்று ஆர்வமும் அழுத்தமும் இருப்பதாகத் தெரிந்தது.

''என்னம்மா... கேக்கறதுக்கு ஒண்ணும் சொல்லமாட்டேங்குறே?''

''ஆமான்டா.... எதுக்கும் கொஞ்சம் டயம் வேண்டாமா? அவுங்க சாயங்காலத்துக்குள்ள வந்திட முடியுமான்னு தெரியலையே'' என்று இழுத்தவாறு சொன்னாள்.

''அதெல்லாம் வரத்தான் வேணும்.'' அவன் குரலில் முரட்டுத்தனம் தெரிந்தது.

**மா**மனும் அக்காளும் அக்காள் குழந்தைகளும் இரவுதான் வந்தார்கள். அவரை மறுநாள் காலைதான் எடுத்தார்கள். அதற்குள் எடுப்பதுபற்றி தாயாருக்கும் மகனுக்கும் கருத்து வேறுபாடுகள்.

மயானத்திலும் பிரபு பரபரப்பாயிருந்தான். தலைமுடியும் மீசையும், சவரம் செய்து கொள்ளத் தயங்கிபோது, குறுக்கிட்டவர்களை 'உங்களைத் தெரியாதா....' என வைதான். யாரும் அவனிடம் பேச யோசித்தார்கள். கடைசியில் அவன் நண்பன் கார்த்திக் சொன்னது கேட்டு மீசை மட்டும் மழித்தான்.

**ச**ரோஜா பயணப்பட ஆயுத்தம் செய்து கொண்டிருந்தாள்.

''ஏன்டா... இவள் கிளம்பராளாமேடா....'' அம்மாவின் குரல் மிகவும் கம்மியிருந்தது.

''யார் செத்தா அவளுக்கென்ன... யார் இருந்தா அவளுக்கென்ன? கட்டிக் குடுத்திட்டல்லம்மா..... விட்டிடு. நான் ஒருத்தன் இருக்கேன்ல எல்லாத்துக்கும். சரோஜா அவ புருஷன் வீட்டுக்குப் போகட்டும்.'' நெருப்புத்துண்டங்களாய் வந்து விழுந்தன வார்த்தைகள்.

நிலைப்படியைப் பிடித்துக் கொண்டு பாக்யத்தம்மாள் உட்கார்ந்து விட்டாள்.

''என்னைப் பார்த்து எல்லாரும் பொறாமைப்படுறீங்க. நான் ஒருத்தி நல்லாயிருக்கிறது உங்களுக்கெல்லாம் கண்ணை உறுத்துது'' என்று சொல்லிவிட்டு விசும்ப ஆரம்பித்தாள் சரோஜா.

நிலைமை வேறுவிதமாகத் திரும்புவதை உணர்ந்த பிரபு தன் கைப்பையை எடுத்துக் கொண்டு ''அவ போறதுன்னா போகட்டும், இருக்கிறதுன்னா இருக்கட்டும். எனக்கு அக்கறை இல்லை. நான் இன்னைக்கு டெல்லி கிளம்புறேன், அம்மா... சாயங்காலம் வரேன்'' என்று சொல்லிவிட்டு வெளியில் கிளம்பினான்.

**நே**ராகப் 'பெரியவர்' கடைக்குப் போனான். வெயில் கண்ணைக் கூசியது.

# உல்லாசமாய்க் கொண்டாடுங்கள் ஓய்வு பெறுவதை!

## எல்ஐசி'யின் ஜீவன் அக்ஷய்

### ஓய்வு காலத்தில் சேமிப்பை மாதாந்திர வருவாயாக்கும்- ஆயுட்காலம் முழுவதற்கும்.

ஜீவன் அக்ஷய் – 50 வயதோ அதற்கு மேலோ உள்ள எவருக்கும் தன் விருப்பத் தேர்வுக்குரிய ஒரு ஒப்பற்ற ஓய்வு – ஊதியத் திட்டமாகும். அவர்களுடைய வாழ்நாள் சேமிப்பை, அவர்கள் ஆயுட்காலம் முழுதும் உதவிட வைக்கும் பிராவிடெண்ட் நிதி, பணிக்கொடை (கிராஜுட்டி) போன்ற ஓய்வுகாலப் பலன் தொகைகள் ஜீவன் அக்ஷயில் முதலீடு செய்யப்பட்டால், செலவழியாமல் பத்திரமாயிருந்து மாதாந்திர வருவாயாகக் கிடைப்பது உறுதி.

**ஜீவன் அக்ஷய் தரும் நற்பயன்களைப் பாருங்கள்:**

- பின் தேதியிட்ட 12 செக்குகள் (ஒவ்வொரு மாதத்திற்கும் உரியது) ஆண்டு முழுமைக்கும் முன்னமேயே கிடைத்திடும். இது (வாழ்க்கைக்கு) ஒவ்வொரு ஆண்டும் உங்கள் முதலீட்டின் 12.7 சதவிகித அளவாகும்.
- ஆண்டுக்கு 40,000 ரூபாய் வரை கட்டப்படும் பிரீமியங்கள் வருமான வரிச் சட்டத்தின் 80 சிசிஏ — பிரிவின் கீழ், வருமான வரி விதிப்புக்கு உட்பட்ட வருமானத்திலிருந்து 100 சதவீதம் வரிவிலக்கு உரிமை பெறும்.
- பாலிசிதாரரின் இறப்பிற்குப்பின் அவருடைய சட்டப்பூர்வமான வாரிசுதாரர்களுக்கு அசல் தொகை வழங்கப்படும்.
- சேமிக்கத் தொடங்கி 7 ஆண்டுகளுக்குப் பிறகு (சிறிதே குறையும் மாத வருமானத்தோடு) முதல் தொகையில் 30 சதவிகிதம் திரும்பப் பெறும் விருப்பத் தேர்வுரிமை.
- 31.3.89—ல் அல்லது அதற்கு முன்பாக ஒப்பந்தம் துவங்கிய ஜீ.இ.எல். தொகையின் ஒவ்வொரு 1000 ரூபாய்க்கும் ஒவ்வொரு வருடத்திற்கும் 1.4.91 லிருந்து 31.12.92 வரையிலான காலத்தில் ரூ. 4 இறுதி (கூடுதல்) போனசாக வழங்கப்படும் (பாலிசிதாரர் இறக்கும் பட்சத்தில் மட்டும்)

*விளக்கப் பிரசுரம் மற்றும் விவரங்கள் பெற அருகிலுள்ள எல்ஐசி அலுவலகத்தோடு அல்லது எந்த ஒரு எல்ஐசி ஏஜெண்டோடு அல்லது டெவலப்மெண்ட் ஆஃபீஸரோடு தொடர்பு கொள்க. இனிதே உதவி கிடைத்திடும்.*



**லைஃப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆஃப் இந்தியா**

CLARION C LIC 12 R TM



''பத்மா. பக்கத்து வீட்டுப் பையங்க வந்திருக்காங்க... காப்பி எடுத்து வா!''

''என்னங்க திடீர்னு இத்தனை பாசம், பரிவு?''

''வேற வழி? நம்ம காரை இரண்டு கிலோ மீட்டர் தள்ளிக்கிட்டு வந்திருக் காங்களே.''

- கே. வி

---

உள்ளம் குற்ற உணர்வால் தத்தளித்தது. டெல்லி போகாவிட்டால் என்ன? இவ ளெல்லாம் என்னைப் பேசுவதுமாதிரி ஆகி விட்டதே! கல்யாணம் ஆன பிறகு ஒரு லெட்டராவது போட்டிருப்பாளா?

பிரபுவின் மனம் கொதித்தது. டெல்லி போகக் கூடாதாம். போறவரு போய்ட் டாரு. எல்லாக் காரியமும் ஆச்சு. இங்க இருந்து என்ன பண்ணுவதாம்? என்ன விளையாடவா போறேன் டெல்லிக்கு.

கடையில் வெளியில் கிடத்திவிருந்த மரபெஞ்சில் உட்கார்ந்து கொண்டான். ஒரு 'லெமன்' சோடா கேட்டு வாங்கிக் கொண்டான். மெதுவாய் உறிஞ்சினான்.

'வயசு முப்பதாகுது. இன்னும் கல்யா ணம் பண்ணிக்கலை. நம்ம வயசுக்காரனுக் கெல்லாம் இப்ப இரண்டு பிள்ளை இருக்கு. ஆபீஸ் விட்டா வீடு. வீடுவிட்டா ஆபீஸ். வீட்டிலோ அம்மாவிற்கும் அப்பா விற்கும் மாடா உழைக்கணும். ஹூம். ஏதோ செலக்ஷன் ஆகியிருக்கு. டெல்லி வரைக்கும் போகலாம், மதிப்பா இருக் கும். ஏசி ரூம், பெரிய ஓட்டல்களில் சாப் பாடு, பெரிய விஷயமெல்லாம் டிரெயி னிங் என்று பார்த்தால்..... கிளம்ப விடாதே நம்ம விதி....

'....ஏன் கிளம்பாமல்? நாமதான் சரோஜா கிட்ட சொல்லிட்டு வந்திட் டோமே! கிளம்பிட வேண்டியதுதான்.'

குளிர்ச்சியான சோடா உள்ளிறங்கி யதும் அயர்ச்சி சிறிது குறைந்த மாதிரி இருந்தது..

'அதுக்காக அப்பா செத்த ஒரே நாள்ல கிளம்புறதா? அம்மாவைத் தவிக்க விட் டுட்டு போகலாமா?' - பிரபு இரு வேறு மனிதர்கள் பேசுவது போல அவனுக்குள் ளேயே கேள்வியும் பதிலுமாய்ச் சிந்தித் தான்.

'என்னதான் கொஞ்ச காலமா தெரிஞ்சு போய் மனசு மெல்ல மெல்ல ஒத்துக்கிட்ட விஷயம்னாலும் அப்பாவை இழந்தது நம்மைப் பாதிக்கலையா? நமக்கு இந்த சமயத்தில் டெல்லிக்கு டிரெயினிங்குக் காகப் போறது குற்றமாகவே தெரிய லையா?'

'கிடைக்காத சந்தர்ப்பம் கிடைச்சி ருக்கு. விட்டிடணுமா?'

'ஏன்... என் படிப்புக்காகவே அடிக்கடி மாற்றல் வேண்டாமென்று ஆபீஸராகாம லேயே அப்பா கிளார்க்காகவே ரிட்டயர் ஆகலியா...'

'ஏன்?... எனக்காக மட்டும்தான் தியாகம் செய்தார்களா? சக்திக்கு மீறிய இடத்தைச் சரோஜாவுக்குப் பார்த்திட்டு சரோஜாவுடைய பேராசையால விடமுடி யாம அப்பாவுடைய 'பிஎப்' பணம் வீட்டு மேல கடன், வெளியில கடன்னு ஏகப் பட்டது செலவு பண்ணி அவளைக் கட்டிக் கொடுக்கலையா? அவளுக்கு மட்டும் அப்பா அம்மா தியாகம் பண்ணலையா? அவள் மாயவரத்திலிருந்து கார்லேயே வந்திட்டு உடனே நலுங்காம திரும்பிப் போகணும். நான் எனக்கு ஏகதேசமா வர்ற சந்தர்ப்பங்களையும் விட்டிட்டு அம்மா வோட கிடக்கணும்.'

'கிடக்கறதா....? நான் 'காஷ்' டிப் பார்ட்மெண்டில் வேலை செய்த பொழுது காணாமல் போன ரூபாய் ஒன்பதாயிரத் தையும் ஒரு வாரத்துக்குள் கட்டாவிட்டால் வேலையை விட்டு 'டெர்மினேட்' பண்ணி விடுவதாகக் கம்பெனியிலிருந்து நான்கு வருடம் முன்பு ஆர்டர் வந்த பொழுது, அப்பா தன் முதல் சம்பளத்திலிருந்து அம்மாவுக்கு வாங்கிப் போட்ட நாலு தங்க வளையலையும் பிடிவாதமா விற்றுப் பணம் கட்டக் கொடுத்தாளே அம்மா, அவ ளோடு இருப்பதையா 'கிடக்கணும்'ன்னு நினைக்கிறோம்.'

நெஞ்சு கனக்க ஆரம்பித்தது. கண்களில் நீர் கோர்த்துக் கொண்டது. அவனுள் குழப்பம் குறைந்தமாதிரி இருந்தது. கடை மரபெஞ்சை விட்டு எழுந்தான். வீடு நோக்கி விடு விடுவென்று நடந்தான்.

**வா**சலில் காரைக் காணோம். சரோஜா கிளம்பிப் போய்விட்டிருந்தாள்.

பிரபு உள்ளே வந்த சத்தம் கேட்டு, பாக்யத்தம்மாள் மெதுவாக நிமிர்ந்து பார்த் தாள். நேற்றிலிருந்து சாப்பிடவில்லை. காப்பி மட்டும்தான். களைத்திருந்தாள். உடலைவிட மனத்தால் அதிகம் சோர்வுற் றிருந்தாள்.

அருகில் போய் அமர்ந்தான் பிரபு. அம்மாவின் தோள்களை இறுகப் பற்றி னான். கண்களில் நீர் கோர்த்துக் கொண்டு தளும்பியது.

''நான் போகலம்மா... நான் போக லம்மா உங்களைத் தனியா விட்டுட்டு இனி எங்கயும்....'' பேச முடியாது அழுகையை அடக்க முயற்சி செய்த பிள்ளையைக் கட்டிக் கொண்டு பாக்யத்தம்மாளும் அழுதாள்.









நீங்கள் கேட்டவை - தராசு

# சசிகலா அமைச்சர் ஆவாரா?

● ஸி. ராஜேந்திரன், சின்னசேலம்.
? ஜெயலலிதா, கருணாநிதி, எம். ஜி. ஆர். - இவர்களை விளம்பரப் பிரியர் முறைப்படி வரிசைப்படுத்துங்களேன்?

! நீங்களேதான் வரிசைப்படுத்தி விட்டீர்களே!

● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.
? மனச்சாட்சிக்குப் பயந்து பணிபுரியு மாறு அதிகாரிகளை அமைச்சர் எஸ். டி. எஸ். கேட்டுக் கொண்டிருக்கிறாரே?

! யாருடைய மனச்சாட்சி? இப்போதெல்லாம் மந்திரிகள், முதல்வர் ஆகியோரின் மனச்சாட்சியைப் புரிந்து கொண்டுதானே அதிகாரிகள் பணியாற்ற வேண்டியிருக்கிறது!

● த. ரவீந்திரன், புதுவண்டிப்பாளையம்.
? இங்கிலாந்துடன் ஆடி தோற்ற முதல் ஆட்டத்தில் ரவி சாஸ்திரியின் அரை சதம் எப்படி?

! நூறு பந்துகளைச் சந்தித்து அரை சதம் என்பது ஒரு நாள் கிரிக்கெட்டில் ஆமை ஆட்டம். அதற்கு அவர் முழங்காலில் உள்ள கோளாறு காரணமாயிருக்கலாம். அதனால் டீமிலிருந்தே கழற்றி விடப்படுகிறார். எப்படியோ ஒற்றை பாயிண்ட்டில் நிற்கும் இந்தியா, அடியோடு மானமிழக்காமல் தப்பினால் சரி.

● இலங்கேஸ்வரன், வேலூர்.
? ஜெயலலிதாவின் பிறந்த நாளன்று, அமைச்சர்கள் ஜெ படத்தைக் கையில் பச்சை குத்திக் கொண்டது பற்றி...?

! எம். ஜி. ஆர்., அ. தி. மு. க. கொடியைப் பச்சை குத்திக் கொள்ளச் சொன்ன போது அதை எதிர்த்து வெளிவந்த இன்றைய அமைச்சர்கள் விஸ்வநாதனும் இந்திர குமாரியும் இப்போது என்ன செய்ய, சொல்லப் போகிறார்கள்! இந்த மூடநம்பிக்கையை வளர்க்கும் விதமாக ஜெ. எதும் கூறாவிட்டாலும் வேண்டாம் என்று தடுக்காததே மறைமுகமாக வளர்ப்பதாகிறது.

● நல்லாலம் காசிதாசன், தாழம்பள்ளம்.
? 'தையற் சொல் கேளேல்' - விளக்கம் யாது?

! என்னை மாட்டி விடப் பார்க்கிறீராக்கும். நடக்காதுன்னேன்! 'தையற் சொல் கேளேல் தீது விளையும்' என்பதுதான் பழமொழி. அது நாளடைவில் சுருங்கி...

● எஸ். கே. எம். மோஹன், வேலூர்.
? ஜெயலலிதா பிறந்த நாளில் ஆயுள் கைதிகளும் மற்ற கைதிகளும் விடுதலை செய்யப்பட்டது சரியா?

! தவறு என ஏற்கெனவே நிரூபணமாகி விட்டதே! அப்படி விடுதலையானவர்களுள் ஒருவன் மறுபடி கொள்ளையில் இறங்கி... திமிலோகப்படுத்தியிருக்கி





ஒரு மனிதர், ஒரு பதவி



றானே. நீதிமன்றத் தீர்ப்பை மாற்றி விடுதலை அளிக்கும் அதிகாரம் முதல்வரிடம் இருந்தாலும் அது மிக மிக அபூர்வமாக, மிகுந்த முன்யோசனையுடன், சர்வ ஜாக்கிரதையாகக் கையாளப்பட வேண்டும். சகட்டு மேனிக்கு அல்ல.

● கே. பாலசுப்பிரமணியன், செய்துங்க நல்லூர்.

**? 'கம்யூனிஸம் செத்து விட்டது; ஆனால் சோஷலிஸ விதைகள் உயிர் பெற்றுள்ளன' என கார்பசேவ் கூறுகிறாரே?**

! சோஷலிஸம் என்ற சமதர்ம சமுதாயத்தை அடைய கம்யூனிஸம் ஒன்றே வழி என்ற கருத்து தவறு; அதனை வேறு மார்க்கத்திலும் அடைய முடியும் - பின்னது முன்னதை விடச் சிறந்த வழி என்று சொல்லாமல் சொல்கிறார்.

● கே. என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

**? சசிகலா அமைச்சர் ஆவாரா?**

! அப்படியெல்லாம் பதவி இறக்கத்துக்கு அவர் சம்மதித்து விட மாட்டார்; ஜெயும் அப்படி எண்ண மாட்டார்.

● எம். குணசேகரன், வேலாயுதம் பாளையம்.

**? நரசிம்மராவ் அரசின் சிக்கன நடவடிக்கை ஜெயலலிதா அரசின் சிக்கன நடவடிக்கை - ஒப்பிடுக.**

! இருவருமே சிக்கன நடவடிக்கை எடுப்பதில் சிக்கனம் காட்டுகிறார்கள் என்பது ஒற்றுமை.

● ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

**? 'ஜெயலலிதாவின் ஆட்சித் திறமையைப் பார்த்து மற்ற மாநில முதல்வர்கள் மூக்கின் மேல் விரல் வைக்கிறார்கள்' என்று அமைச்சர் ஆர். எம். வி. பேசியிருக்கிறாரே?**

! இப்படியெல்லாம் பேசினாலாவது 'சாண் ஏறினால் முழம் சறுக்குகிறதே' என்று அங்கலாய்க்க இடமில்லாமல் போகாதா என்ற நைப்பாசைதான் காரணமாயிருக்கும்.

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

**? காங்கிரஸ் தலைவராக நரசிம்மராவ் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது சரியா?**

! இன்றையச் சூழ்நிலையில் கட்சியையும் ஆட்சியையும் கட்டிக் காக்க வேறு வழி இல்லை என்பதால் ஒப்புக் கொண்டாலும் 'ஒரு மனிதருக்கு ஒரு பதவி' என்ற கொள்கையையும் தாம் ஏற்பதாக அவர் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. இத்துடன், 'கட்சி வேறு, ஆட்சி வேறு' என்ற உணர்வையும் அவர் அனைவரிடமும் ஊட்ட முயற்சி மேற்கொள்ள வேண்டும்.

● எஸ். தேவேந்திரன், தேத்தாகுடி தெற்கு.

*? சட்டப் பேரவைத் தலைவர் தாம் சார்ந்த கட்சிக் கரை வேட்டி அணியலாமா?*

! ஏற்கெனவே வாங்கி விட்டிருக்கும் வேட்டிகளை என்ன செய்வதாம்? அவருக்கு வீண் செலவு வைக்காதீர்கள். சட்டப் பேரவைத் தலைவருக்கு நெஞ்சில் கட்சிக் கறை படியாமல் இருப்பதுதான் முக்கியம். அதை அவர் உணர்ந்து செயலாற்றட்டும்.

● எஸ். பாண்டியராஜ், காரைக்குடி.

**? மன்மோஹன்சிங், உலக வங்கி நிபந்தனை விவகாரத்தில் நாடாளுமன்றத்தில் தேறுவாரா?**

! பட்ஜெட்டில் என்னென்ன அம்சங்கள் உள்ளன என்ற ரகசியம் உலக வங்கிக்கு வெளியிடப்படவில்லையே தவிர, உலக வங்கியின் நிபந்தனைகளுக்கு உட்பட்டுத்தான் பட்ஜெட் தயாரிக்கப்பட்டுள்ளது என்பது தெளிவு. 'நிபந்தனைக்கு உட்படவில்லை; இந்திய அரசின் கருத்தும் உலக வங்கி கருத்தும் ஒத்துப் போகிறது' என்பது முழுப் பூசணி விவகாரம்.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எஸ். கே. எம். மோஹன்,
நெ. 54, பிள்ளையார் கோயில் தெரு,
கழிஞ்சூர்,
வேலூர் - 632 006.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.

# நல்ல அம்மாவுக்கு நல்லாத் தெரியுமே!

அம்மாவுக்குத் தெரியுமே .....



வளரும் பிள்ளைகளுக்கு வலிமை தரும் புரதச்சத்துடைய உணவு தான் தேவையென்று. வலிமை தரும் உணவுக்கு சோயாதான் சரியான மூலமென்றும் அம்மாவுக்குத் தெரியும்.

அதனால்தான் அவரின் தினசரி சமையலில் ''விகர்'' தவிர்க்க முடியாததாகி விடுகிறது.

சமையலில் 10-15% ''விகர்'' கலந்தால் போதும். மொத்த உணவுமே சத்துணவாகிறது.



சப்பாத்தி, பூரி, இட்லி, தோசை போன்றவற்றுக்கு மட்டுமின்றி ஜிலேபி, பக்கோடா போன்றவற்றுக்கும் ''விகர்'' உன்னதமான கலவையாகத் திகழ்கிறது.

**''விகர்'' ஒவ்வொருவருக்கும் உகந்த உணவு**

விளையாட்டு வீரர்களுக்கு, ''விகர்'' வலிமையை சேமித்து வெற்றியினைத் தருகிறது.



தாய்மை நிலையிலுள்ள பாவையருக்கு, ஊட்டச்சத்து மிகுந்த உணவாய்த் திகழ்கிறது. நீரிழிவு நோயாளிகளுக்கு உணவு முறையை சமப்படுத்தி உறுதுணை புரிகிறது.

**சக்தி சோயாஸின் ''விகர்''**

ஜெர்மனி மற்றும் சுவிட்சர்லாந்தின் தொழில் நுட்ப உதவியோடு, தரமுயர்ந்த சோயாபீனில் தயாராகி வருகிறது ''விகர்''

**உன்னதமான உணவுக்கலவை**




100%
சைவ உணவு
50%
புரதச்சத்து



விகர் அம்மா... நல்ல அம்மா!

சக்தியின் தயாரிப்பு

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

**மணிக்கணக்காய் ஜிம்னஷியத்தில் சிரமப்பட வேண்டுமா, இல்லை புல் ஓர்க்கருடன் சில நிமிடங்களே செலவிட வேண்டுமா? நீங்களே தீர்மானியுங்கள்.**

நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இவ்வளவுதான், வீட்டிலே தனிமையில் சில நிமிடங்கள் புல்ஓர்க்கர்-3-ஐ பயன் படுத்துங்கள். தசைக் கட்டுடன் திகழவும், இரத்த ஓட்டத்தை மேம் படுத்தவும், கொழுப்பைக் குறைக்கவும்.

புல்ஓர்க்கர்-3 உங்களுக்கு 14-நாள் முயற்சித்துப் பார்ப்பதற்கான வசதியுடன் அஞ்சல் மூலம் கிடைக்கிறது. உங்களுக்கு திருப்தியில்லை எனில், திருப்பி அனுப்பிவிடுங்கள், நாங்கள் பணத்தைத் திருப்பிக் கொடுக்கிறோம் (ஹேண்டிலிங் மற்றும் ஃபார்வர்டிங் கட்டணங்களை கழித்துவிட்டு)

விலை: புல்ஓர்க்கர்-3 ரூ. 360. டம்பி ட்ரிம்மர் (ரெகுலர்) ரூ. 247. அட்வான்ஸ்டு ரூ. 344 புல் ஹைட் ரூ. 315.

**புல் ஓர்க்கர் 3**

**எல்லா பிரபலமான ஸ்போர்ட்ஸ் கடைகளிலும் அசல் புல்ஓர்க்கர் கிடைக்கிறது.**

எங்களுடைய ஷோ ரூமிலும் கிடைக்கிறது.
புல்ஓர்க்கர் பிரை. லிட்.
மேத்தா மஹால், 15, மேத்யூ ரோடு, பம்பாய்-400 004.

ஆம். எனக்கு வேண்டும் புல்ஓர்க்கர்-3/டம்பி ட்ரிம்மர்-ரெகுலர்/டம்பி ட்ரிம்மர்-அட்வான்ஸ்டு/புல் ஹைட். இத்துடன் ரூ. ______ டிமாண்ட் டிராப்ட்/போஸ்டல் ஆர்டர் அனுப்பியுள்ளேன். அதை தபால் மூலம் விரைவில் எனக்கு அனுப்பி வைக்கவும்.

பெயர்: ______ பால்: ஆ/பெ
முகவரி: ______
நகரம்: ______ மாநிலம்: ______ போன்: ______
பிறந்ததேதி: ______ தொழில்: ______
டிமாண்ட் டிராப்ட்/போஸ்டல் ஆர்டர்: ______

புல்ஓர்க்கர் பிரை. லிட்.
மேத்தா மஹால், 15 மேத்யூ ரோடு, பம்பாய்-400 004

Kol/BW-3/92

**BULLWORKER**

**FITNESS FOR LIFE**

Contract.BW.567.92Tm.